# TONNUL VILAKKAM.

## THE FIVE PARTS OF TAMIL GRAMMAR

WITH EXPLANATORY PARAPHRASE

BY

CONSTANTIUS BESCHI, COMMONLY KNOWN AS VIRAMÂMUNIVAR.

SECOND EDITION.

Republished by the Rev. G. M. COBBAN.

Madras:
Published by ADDISON & CO., Mount Road.
1891.

கடவுள்துணை.

செந்தமிழ்த்தேசிகரும்,
தைரியநாத சுவாமிகளும் ஆகிய
வீரமாமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய
ஐந்திலக்கணத்

# தொன்னூல்விளக்கம்.

## மூலமும் உரையும்.

இவை,

இராயப்பேட்டை உவெஸ்லியன் மிசியோன்
காலேஜு தமிழ்ப்பண்டிதரான
ம-ா-ா-ஸ்ரீ. உ. ஸ்ரீநிவாச ராகவாசாரியா ரவர்களால்
பார்வையிடப்பட்டு,

**கனம். ஜி. மெக்கென்ஜி. காபன் அய்யர்**
அவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு

சென்னை. பாபம்ஸ்சாலை

ம-ா-ா-ஸ்ரீ ம. சா. இயாகப்பிள்ளை அவர்களால்
அர்ச். சூசையப்பர் அச்சுக்கூடத்தில்
அச்சிடப்பட்டது.

௧௮௯௧-வருஷத்துக்குச் சரியான கர-வருஷம்

கடவுள்துணை.

---

# முகவுரை.

செந்தமிழ்த் தேசிகரான வீரமாமுனிவரா லியற்றிய வைந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் எனு மிந்நூலானது 1838ம்-ஆண்டில் பிரபல வித்துவானாகிய களத்தூர் - வேதகிரி முதலியாரால் பார்வையிடப்பட்டு, புதுவை மாநகரத்தில் முதல் முதலில் அச்சிடப்பட்டது. வீரமாமுனிவ ரியற்றிய பலநூல்களைப்போலவே இதுவும் பொருள்நடை முதலியவற்றிற் சிறந்து காணப்படும்.

செந்தமிழ்க்குரிய வைந்திலக்கணத்தைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் தெரிவிக்கும் சிறந்த நூல் வேறின்மையின் இதனை மாணுக்க[illegible] பிரயோஜனமாக இரண்டாந்தரம் அச்சிற் பதிப்பிக்க வேண்டு மெ[illegible]று நான்விரும்பி இராயப்பேட்டை உவெஸ்லியன் மிசியோன் காலேஜ்-ு தமிழ்ப் பண்டிதரும் எனது நண்பருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, உ. ஸ்ரீநிவாசாராகவாசாரியர் அவர்களை இதைப் பார்வையிடும்படி கேட்டுக் கொள்ள அவர் இதைப் பழைய பிரதியுடன் ஒப்பிட்டுப் பரிசோதித்துத்தர அதை நான் முதற் பதிப்பைப்போலன்றிச் சூத்திரமும் உரையும் நன்கு விளங்குமாறு சூத்திரத்தைச் செய்யுள்போலப் பெரிய வெழுத்திலும் வசனரூபமா யிருக்கும் உரையைச் சிறிய வெழுத்திலும் பதிப்பித்து, அதிகாரம், இயல், ஓத்து முதலியவற்றிற்குத் தக்கவாறு இங்கிலீஷ்ப்பெயரு மெடுத்துக்காட்டி யிருக்கிறேன். மேற்கூறிய வெனது நண்பர் எனக்குச் செய்த விப்பேருதவிக்கு நான்மிக நன்றியறிதலுள்ளவனு யிருக்கிறேன்.

வீரமாமுனிவர் சரித்திரத்தை முதல் முதலில் எழுதினவரும் தமிழ் வித்துவானுமாகிய, அ. முத்துச்சாமிப் பிள்ளை யவர்களினது மிகவணுகிய மரபினரான ம-ா-ா-ஸ்ரீ, ம. சா. இயாகப்பிள்ளை யவர்கள் தயவாய் இதைத் தமது இயந்திரசாலையில் அச்சிட்டுத் தந்ததற்கும், உவெஸ்லியன் மிசியோன் சங்கப் போதகராகிய, ம-ா-ா-ஸ்ரீ, யாழ்ப்பாணம். சா. வே. அம்பலவாணர் ஐயர் இதை எழுத்துப் பிழையறப் பார்த்ததற்கும் நான் மிகவும் வந்தனம் செலுத்துகிறேன்.

இங்ஙனம்,

கர௵ ஆவணிமீ
1891-௵ ஆகஸ்டு-மீ

ஜி. மெக்கென்ஸி. காபன்.

# வீரமா முனிவர்
# சரித்திரச் சுருக்கம்.



ஐரோப்பா கண்டத்திலுள்ள இத்தாலியா தேசத்தி லிருக்கும் காஸ்திகிலியோனே என்னும் ஊரானது ஒங்கு புகழ் பெற்ற தொன்னூலியற்றிய வீரமாமுனிவர் பிறப்பிடமாம். 1680-ஞு நவம்பர்-மீ 8-உ அவருக்கு ஜெர்மவார மாயிற்று. அவரைப் பெற்றோர் அவருக்குக் கான்ஸ்டன்ஷியுஸ் பெஸ்கி யெனப் பெயரிட்டார்கள். அவர் அவ்வூரிலும் உரோமாபுரியிலும் கல்விகற்று, இயேசுவின் சங்கத்தை யனுசரித்து, உரோமைச் சங்க வொழுங்குபடி நடந்து வந்ததினால், அவரது தெய்வபக்தி, கல்வி, சாதூரியம் முதலியவற்றைக் கேள்வியுற்ற பாப்பானவர் அவரதுசாமர்த்தியத்துக்கு வியந்து, தென்னிந்தியாவிலுள்ள மதுரைமா நாட்டுக்குப்போய் சற்குருவாகிய இயேசுவின் மாட்சிமையை அவ்விராச்சியத்தாருக்குத் தெரிவிக்க அவரை நியமித்தார். ஆனால் உரோமைச் சங்க முறைமையின்படி இருபத்தைந்து வயதாகுமுன் இவர் குருபட்டம் பெறுவது கூடாதாதலால் 1706-ம் வருஷத்தில் அவர் அப்பட்டம் பெற்று, இந்தியாவுக்குப் புறப்பட்டு வந்தார். இந்தியாவின் மேற்குக் கரையிலுள்ள கோவா வென்னும் ஊரை யடைந்து தமிழ்ப் பாஷை பயின்று, 1708-ம் வருஷத்தில் திருநெல்வேலிக்குச் சென்றார். அங்குள்ள காமயாநாயகன்பட்டி யென்னும் ஊரில் 1714-ம் ஆண்டு முதல் 1716-ம் ஆண்டுவரையில் வசித்ததாகவும், இங்கிருந்து கைத்தார் என்னுங் கிராமத்துக்கு அடிக்கடி போக்கு வரவு செய்து வந்ததாகவும், திருநெல்வேலியில் 1714-ம் ஆண்டில் வடகன்குளம் சபையை ஸ்தாபித்த பிராண்டலீனி யென்னுந் தேசிகர் சொல்லுகிறார். பாளையங்கோட்டையி லிருந்து மதுரைக்குப் போகும் மார்க்கத்தில் உள்ள இவ்வூரானது அக்காலத்தில் மிகவும் பேர்பெற்றிருந்தது. சங்கரநயனார்கோவில் தாலுக்காவிற் கல்பட்டி யென்னுங் கிராமத்தில் அவர் தாம் செய்த தேவ ஊழியத்திற் செயம் பெற்றது கொண்டு அங்கொரு தேவாலயங் கட்டினார். இதி னிமித்தம் அங்குள்ள பிராமணர்கள் கோபங்கொண்டு இவரைப் பிடித்துச் சிறைச்சாலையில் வைத்துக் கோயிலையும் இடித்து விட்டார்கள்..

அந்தக்கிராமத்துப்பிராமணர்கள் தங்கள் முன்னோர் பாழாக்கிய மேற்சொன்ன தேவாலயத்தி னடையாளங்களைத் தற்காலத்தில் நமக்குக் காண்பிப்பதுடன் அது பெஸ்கி என்பவர் கட்டி வைத்த தென்றும், அவரையும், அவரால் கிறிஸ்தவனான வோர் பிராமணனையும், அவ்வூரி லிருந்து தங்கள் முன்னோர் அடித்துத் துரத்தி விட்டார்கள் என்றுஞ் சொல்லுவார்கள். அக்காலத்தி லிருந்த பிராமணர்கள் மிகவும் மத வைராக்கியமுள்ளவர்கள்.

ஆகையால் அவனைச் சிறைப்படுத்துவதினால் திருப்தி யடையாமல் அவனைக் கொலை புரியவு மெத்தனித்தார்கள். அப்போது கயித்தார் என்னுங் கிராமத்துக் கிறிஸ்தவர்கள் செய்த முயற்சியினால் அவர் சிறைச்சாலையினின்றும் விடுதலையாகி, மரணத்திற்குத் தப்பிப்பிழைத்தார். இவ்வாறுனதால் அந்தப் பிராமணர்கள் கொண்ட எண்ணம் நிறைவேறாமற் போயிற்று. இதன் உண்மை அவ்வூரின் சுற்றுப்புறத்துள்ள கிறிஸ்தவக்கிராமவாசிகளின் கன்னபரம்பரையாலும், 1715ம்-ஹு சனவரி-மீ 12-உ பெஸ்கி யென்பவர் தாமே யெழுதியிருக்கிற நிருபத்தாலும் விளங்கும். பின்பு அவர் 1716-ம் வருஷத்தில் மதுரைக்குச் சென்றார். ஆனால் அவர் அங்கே செய்ததின்னதென்று தெரியவில்லை; பிறகு 1720-ம் வருஷத்தில் திருச்சிராப்பள்ளிக் கடுத்த வடுகர்ப்பட்டியில் வந்து நிலைத்திருந்தார். இவ்வாறு நடக்குங் காலத்திலும் அவர் தமிழைக் கற்றுத் தேர்ந்து அதைக் கரைகண்டா ரென்பதற்கு 1726-ம் ஆண்டில் அவரியற்றிய தேம்பாவணி முதலான சிறந்தநூல்களே சாட்சி பகரும். இவர் காலத்துக்குப் பிறகு இந்நாட்டுத் தமிழ்ப்புலவர் அநேகர் பலநூல்களைச் செய்தாரேனும், அவைகளி லொன்றேனும் இத்தேம்பாவணிக்கு நிகராமோ?

இதன்றி 1727-ம் ஆண்டில் "வேதியரொழுக்கம்" என்னும் நூலை உபதேச ரத்நாகரம் எனத்திருப் பணியாளருக்குபயோகமாக வியற்றினார். இதனைப்படிப்போருக்கிதன்னடையினால்மனமகிழ்ச்சியும்,பொருளினால் பக்தி, ஞானம் முதலியவற்றின் அபிவிர்த்தியும் உண்டாகும். இயற்றமிழ் நடைக்கிது சிறந்தமுன் மாதிரியாக விருக்கிறதுமன்றி கடுஞ்சொற்பொழிவு, பொருட்பேதம், பிழைபாடு, அன்னியபாஷை நடைக்கலப்பு, முதலியவற்றால் நிரம்பியதும் காதுக்கினிமை யற்றதுமாயிருக்கின்ற தற்கால வியற்றமிழ்நூல்களின் குறைகுற்றங்களை வெளியாக்கும் சுலோசன மெனவுந்தகும்.

1729-ம் ஆண்டில் திருச்சிராப்பள்ளிக் கடுத்த ஆவூரி லிருந்தபோது இவர் தாமியற்றிய தேம்பாவணிக் குரை எழுதினார். இக்கிராமத்திலேயே வெகுநாள் வசித்துத் தமது வாழ்நாளெல்லாந் தமிழை ஆராய்ந்தார். கிறிஸ்துமார்க்கம் இந்நாட்டிற் பரவுதற்கு இவர் இடைவிடாது முயன்று வந்தா ரொன்று கன்னபரம்பரையால் விளங்குகிறது. அவர் ஊருக் கூர்ப் பயணம் பண்ணி ஜனங்களுக்குப் போதித்துத் தம்மோடு வாதாடவந்தவர்களையெல்லாம் வென்று விசேஷமாக உயர்ந்த ஜாதியோரையே கிறிஸ்தவர்களாக்கிவந்தார். கிறிஸ்தவ ஆலயங்கட்டிவைப்பதும் அவற்றை விநோதமாக அலங்கரிப்பதும் அவருக்கதிகப் பிரியம். 50 வருஷத்திற்கு முன்னிருந்த முத்துசாமிப்பிள்ளை யென்பவரொழுதிய வீரமாமுனிவர் சரித்திரத்தில் இவரைப்பற்றி யநேகமாய் காணலாம். திருஷ்டாந்தமாக:—

"கல்விப் பெருக்கத்தா லகங்கரித்த வொன்பது சடைப்பண்டாரங்கள் வந்து வீரமா முனிவரோடு தர்க்கம் பண்ணி யவரை வெல்ல வேண்டு

மெனக் கருதி, தோற்றவர்கள் வெற்றி பெற்றவர்கள் சொற்படி நடப்ப தென்று உடன்படிக்கை பண்ணித் தர்க்கிக்கத் தலைப்பட்டார்கள். ஒரு மாத மட்டும் பண்ணிய தர்க்கத்தில் அவரை வெல்ல மாட்டாமல் தாங்க ளே தோற்றுப் போனதால் அவர்களில் ஆறு பேர் சத்தியவேதத்துக் குட் பட்டார்கள். மற்ற மூன்றுபேர் சடையறுபட்டு வெட்கத்தினால் மேல் சீமைக்குப் போய் விட்டார்கள். அந்தச் சடைகள் திருக்காவலூர்க் கோ வில் மண்டபத்தில் வைக்கோற் கட்டுப்போல ஐதர் கலாபனை மட்டுந் தொ ங்கிக் கிடந்தன." இப்படிக் கவர் தேச சஞ்சாரம் பண்ணிக் கொண்டு போ கிறபோது அவருபதேச மகிமையினால் இத்தேசத் தவர்களிற் பலர் கிறிஸ் தவர்களானார்கள்.

பெஸ்கி யென்னும் வீரமாமுனிவர் ஜீவித்தகாலமோ மிகக் கொடுமை, துன்பம், கலகம் முதலியவற்றால் நிறைந்தது. அவரிருந்த நாடும் அவ்வாறே கலகம், யுத்தம், சர்ப்பனை இவைகளால் கலக்குண்டதினால் அவர் அக்கால காரியகர்த்தர்களுடன் சம்பந்தப்படாதவரா யிருப்பது கூடாது. எவ்வாறெ னில், 1736ம்-ஆண்டில் வஞ்சகம், கொடுமை முதலிய துர்க்குணங்கள் குடி கொண்ட சந்தா ஸாஹேபு என்னும் நபாபு திருச்சிராப்பள்ளியை முற்று கைபோட்டு அதைப் பிடித்துக்கொண்டு. மதுரை நாட்டிற்குத் தாமே அரச னென்று பறையறை வித்தார். அவர் வேண்டுகோள்படி இவரவரிடஞ் சென்று வார்த்தை யாடினபோது அவருக்கு இவரிடத்தில் அதிகத் திருப்தி யுண்டாகித் தமக்குத் திவானாக இவரை யேற்படுத்திக் கொண்டது மன்றி யிவருக் கினுமாக நான்கு கிராமங்க ளளித்தார்.

1740-ம் ஆண்டில் வேலூர் கர்னாடக நபாபாகிய தவுஸ்த் அலிகான் என்பவரைப் போய்த் தரிசித்து, 1739-ஞ அக்டோபர்-மீ 29-உ தமது சங்கத் தலைவர் அந்த நபாபுக்கு எழுதி யனுப்பிய நிருபத்தையுங் காண்பித் தார். இவை முதலிய காரியங்கள் அக்கால காரிய கர்த்தாக்களுட னிவ ருஞ் சம்பந்தப்பட்டா ரென்று விளக்குகிறது.

ஷ 1740-ம் ஆண்டில் மஹாராஷ்டிரர்கள் திருச்சிராப்பள்ளியை மு ற்றுகைபோட்டு 1741-ம் ஆண்டில் அதைப் பிடித்துக் கொண்டார்கள். அ வர்கள் மிகுந்தமதவைராக்கியமுள்ள இந்துக்களாதலால் சந்தாஸாஹேபின் திவானாகிய இவர் கிறிஸ்தவ குருவென்றறிந்தபோது கிறிஸ்தவர்களும் மக மதியரைப்போலவே அம்மஹாராஷ்டிரர்களுடைய பகைக்கு இலக்கானார் கள். இதை யறிந்த பெஸ்கி யென்பவரும் மற்றுமுள்ளவர்களும் மரணத்தி னின்று தங்களைக் காத்துக் கொள்ளும்பொருட்டு ஓடி யொளிக்கும்படி நேரிட்டது. ஆகவே அவர் முதல் முதல் போன இடம் இராமநாதபுரம், அங்கிருந்து திருநெல்வேலிக் கடுத்த வோர் கரைதுறைப்பட்டணத்தைச் சேர்ந்து அங்கே சில காலம் தங்கியிருந்தார். அவ்வூருக்கு மணப்பாடு என் று பெயர். அது அக்காலத்தில் உலாந்துக்காரருக் குரியது. அதிலே உரோ

மான் கத்தோலிக்கு ஆலயமும் சபையு மிருந்தன. பெஸ்கி என்பவர் இந்தியாவுக்கு வந்தவுடன் கொஞ்சக் காலம அங்கே தங்கி யிருந்தபடியால் தமது விருத்தாப்பியத்திலும் அங்கேயே வசிக்க வெண்ணினு ரென்றும் உத்தேசிக்கலாம். அமைதியற்ற உலகம் வேண்டா மென வெண்ணிய இவருக்கு அமைதியுள்ள அவ்வூர் தகுந்த இடமாயிற்று. எனவே இங்கு சில காலம் வசித்துப் பின் தேகவியோகமானுர். அங்குள்ள ஆலயத்தின் பிராகாரத்தில் இவர் சேமிக்கப்பட்டா ரென்றாலும் இதைத் தெரிவிக்க அவ்விடத்தில் சமாதி முதலிய யாதொன்றும் கட்டி யிருக்கக் காணும். இவ்வாறிருப்பது அவரது பெயர், குணம், தாம் செய்து வந்த சன்மார்க்கத் தொழில், முதலியவற்றிற்கு முழுமையும் தகாத காரிய மன்றோ? அங்குள்ள பரவர்கள் இவர் மேன்மையை யறியாமையினுலோ அல்லது தங்கள் வறுமையினுலோ இவர் மரணத்தைக் குறிக்கும் சமாதி முதலிய யாதொன்றும்கட்டாமற் போனுர்களேனும் இவரது சற்குணம், ஆழ்ந்த அறிவு, பயனுறு தொழில், கீர்த்தி, பிரதாபம், முதலியவற்றை யறிந்தவர்களாவது ஏதேனு மொன்றைச் செய்திருக்க வேண்டுமன்றோ? இவரோ தமக்குப் பிறர்செய்வதையெதிர் பாராமல் தாமே தம்முடைய பெயர் நீடூழி காலம் நிலைத்தோங்கும்படி சிறந்த பலநூல்க ளியற்றி யிருக்கிறு ரன்றியும் இவர் செய்து வந்த வேதியர் தொழிலும் போதுமான ஞாபகக் குறியாம். பெஸ்கி யென்பவர் தென்னுட்டுக்கு வந்த பிறகு தமது இயற்பெயராகிய கன்ஸ்டான்ஷியுஸ் என்பதின் பொருள்படும் தைரியநாதன் என்னும் நாம தேயத்தை வகித்துக்கொண்டா ரென்றும், தேம்பாவணி யெனு நூல் வெளிப்பட்ட பிறகு தமிழ்ப் புலவரால் இவர்க்கு வீரமாமுனிவர் என்னும் அபிதான மளிக்கப்பட்டது என்றும் சொல்வர்.

ஜி. மெ. கா.



கடவுள்துணை.

இஃது

வீரமாமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய

# ஐந்திலக்கணத்

# தொன்னூல் விளக்கம்.

# TONNÛL VIḶAKKAM.

மூலமும்-உரையும்.

---

## பொதுப்பாயிரம்.

GENERAL PREFACE.

சீர்மலிகடறவழ் நிலன்முதன் மற்றருஞ்
பேர்மலியுலகெலாஞ் செய்தளித்தழிப்ப
வல்லவனாய்முதன் மட்டறப்பெரிதி
னில்லவனுயி ரிறையோனொருவனைப்
பன்மையொழியப் பணிந்தேயிராவிருட்
டன்மையொழியத் தரணியிற்றோன்றிய
வாதவனிகரிரு ளகற்றறவன்ற
னோதியமறைநூ லோதினனாகி
யம்மெய்ப்பொருளோன் றனைவருமுணரச்
செம்மெய்ப்பொருளத் திருமறைவழங்க
வமைத்துளத்தெழுந்த வாசையுட்டூண்டிச்
சமைத்துளயாவருந் தாங்கத்தருகென
வேவியதாகவிப் பணியேற்றிநூன்
மேவியவைம்பொருள் விளக்கலுணர்ந்து
விரிவிலாத்தொன்னூல் விளக்கமெனும்பெயர்த்
தரியவாசிரிய ருந்தமிழ்ச்சொல்லிற்
பிறநூன்முடிந்தது பெயர்த்துடன்படுத்தும்
புறநூன்முடிந்தது பொருந்தியுந்தானொரு
வழிநூன்முடித்தனன் வாய்ப்பருமெய்ம்மறை

மொழிநூலத்தராய் முதிர்சிறப்பிணையி
லிரோமைநாட்டினின் றெய்தியமுனிவருள்
விரோதமொழித்தகையமேவக
நேரமாதவத்தின் வீரமாமுனியே.

(இதன்பொருள்). இவற்றுணூலின்பெயரு மாக்கியோன்பெயரு மாக்கியகாரணவகையுந் தரும்பொருளளவுங் கொள்வோர்பயனுமென் றிவ்வைந் துறுப்புள விச்சூத்திரம் பொதுப்பாயிரமாக வம்மாமுனி மாணுக்கருணூலி னெளியவென னுமன்பிலுயர்ந்தோ னுரைத்தவாறு காண்க.

என்னையோவெனில்.—

நூலே நுவல்வோ னுவலுந்திறனே
கொள்வோன் கோடற் கூற்றுமைந்து
மெல்லா நூற்குமிவை பொதுப்பாயிரம்.

(இ-து.) நன்னூல் மேற்கோள் ஆகையில், விருத்தி; பெருங்கடல் சூழ்ந்த பூவுலகாதி மற்றுண்டாகிய செல்வமுடைய வுலகங்களியாவையுந் தானுளவாக்கவு நிலைபெறக்காக்கவு மழிவுறநீக்கவும் வல்லவனாகி யாதியுமந்த முமளவுமொப்பு மெதிருமில்லாதவனு மெவ்வகைப்பொருளினு மேனின் றுயர்ந்த கடவுளொருவனை மற்றைத்தேவரை நீக்கித் தனியே பணிந்து போற்றி மாவிராவிருளை நீக்க விப்பூவுலகிற்றோன்றிய பருதியைப்போல மன விருளாகிய வஞ்ஞானத்தை நீக்க வக்கடவுளோதித் தந்த வேதநூலையோ துங் குருவேயாகி யம்மெய்க் கடவுளை யெவருமறிந்து வணங்கவு மவனே தந்த வேதநூலெங்கும் வழங்கவு மாசையே மனத்துட்டூண்டி யேவியதாக விதுவேகாரணமெனத்தா னெழுத்துச் - சொற் - பொரு - ளியாப் - பணி யென வைந்திலக்கணப் பொருட்களைக் கல்லாதவருங் கண்டுணரும்படி தெளிவாகவிளக்கத் துணிந்ததைப்பற்றித் தொன்னூல்விளக்கமென விந் நூற்பெயராகிப் பிறதமிழ்நூலோர் முன்னுரைத் தோதியவற்றைத் தானு டன்படுத்தியுந் தமிழ்ப்புறநூலோர் விதித்தவற்றுட் சிலதான்பொருத்தியு மீண்டொரு வழிநூலென முடித்துரைத்தா ரிவராரோ வெனின் மெய்யங் கடவுடந்த மெய்ம்மறைநூலிற் குருக்களாகச் செல்வவிரோமைநாட்டினின் றெழுந்தருண் முனிவருளொருவராகிய வீரமாமுனி யென்பாரெனக் கண்டு ணர்க. ஆகையிலினிவருஞ் சூத்திரவிதியு முறையின்விரிவு மம்மாமுனிதான் றமே செவி வாயாகப் பருகி நெஞ்சு கண்ணாக வுணர்ந்துகொள்வது கல்வி விரும்பினர்கடனே, என்றவாறு. பதிகம்-பாயிரம்-முகவுரை-ஒன்றும்.

பொதுப்பாயிரம்.—முற்றிற்று.

# சிறப்புப்பாயிரம்.

## SPECIAL PREFACE.

1. சொன்னூலடையாத் தொகைக்குணத்தொன்று
முன்னூறந்த முதல்வனைப்போற்றி
நன்னூலாய்ந்தோர் நவின்றவைம்பொருட்
டொன்னூல்விளக்கமுன் சொற்றுதுமெழுத்தே.

(இ-ள்.) சொல்லத்தகு மெந்நூல்வகையானு மடையப்படாத தேவகுணங்களி யாவையுந் தொகுத்துளனாகி மிக்காரு மொப்பாருமின்றி யொன்றாய் நிற்குங் கடவுளிவனென முதனூலாகிய வேதநூலைத் தந்த முதல்வனைப் பணிந்து நானே வழுவில வுரைக்கவு மற்றவர் பயனுறக் கேட்பவுந் துணைச்செயல்வேண்டி யவனடி தலைமேலணிந்து போற்றி முன் செந்தமிழ்நூற் கற்றோருரைத்த வெழுத்துச் சொற்பொருளியாப்பணி யெனவைம்பொரு ளிலக்கணங்களை விளக்கத் தொடங்கி முன்னீண்டெழுத்தியல் பின்னதென வுரைத்துக் காட்டுது மாகையி னிதுசிறப்புப்பாயிரம். என்னை, தெய்வ வணக்கமுஞ் செய்பொருள் விளக்கமுஞ் செப்புவதாகுஞ் சிறப்புப்பாயிரம். ஆதலா லிலக்கிய வகையான் மூத்தோர்புதைத்த வரும் பயனாகிய பொருளைக் கண்டறிந் தெடுப்பதற் கிலக்கணநூலே விளக்காம். விளக்குதலால் விளக்கென்னப்பட்டது. ஒளிவிடா மூடினதீபத்தாற் பயனில்லை யென்றதுபோல முன்னோர்தந்த விலக்கணநூலெலாஞ் செந்தமிழ்ச் சிறந்த மொழியோடு மூடிக்கிடப்ப விக்காலத் தவ்விளக்கொளியைக் காண்பாரில்லாததற் கொருபயனு மில்லை. தென்மொழியார்க்கு வடமொழியைத் தானுணர்த்தக் கருதி யவர்முன்னறிந்த தமிழ்ச்சொற் கொண்டலவோ வடமொழிப்பயனை யுரைத்தல் வேண்டு மாகையான் மூத்தோர் புதைத்த நூனலம் விளங்கவுங் கல்லாதவரும் பயன் கொள்ளுமாறு நானே யதன் மேற்கவித்த போர்வைநீக்கி யறிஞர் முன் கொளுத்தின தீபமெவர்க்கு மெறிப்பக் கையிலேந்தினாற்போல வவர்முன் செந்தமிழ் மொழியான் மறைத்த விலக்கணநூலை யினத்தமிழுரையால் வெளிப்பொருளாக்கினைத்தேனாயினு முன்னோர்தந்த யாவையும் விரித்துரைத்தா லிந்நூலும் பெருகிக் கண்டவ ரஞ்சித் துணிபாவொன்று கருதி முனமிகவறிய வேண்டுவ தொன்றைத் தெரிந்து தருவேன். இறகு முளைத்து முற்றுமுன்னே தாயினை கொண்டு வருவதன்றியே பறக்கும் பருவம் வந்தபின் றாமேமேய்வன பறவை யலவோ வவ்வாறிங்ஙன நானு மூத்தோர் சொன்னதை அவரவர் தாமே கண்டுபிடிக்க வேண்டுவதை மாத்திரம் விதிவிரித்துரைப்பேன். அதன்பின் முளைத்த சிறகை விரித்து மேற் பறந்து மேய்ந்தாற் போலவுந் தந்த பாசத்தைப்பற்றி மலையேத்துயர் மதயானையையேறி நடாத்தினாற்

போலவுஞ் சிறிதோர் தெப்பத்தைப் பிடித்துப் பெரும் வெள்ளத்தை நீந்தினாற்போலவு மிங்ஙன நான்றந்தவற்றைக் கொண்டு செந்தமிழ்ப் பெருங் கடனீந்தவு முழுகவுஞ் செய்து முற்றுல கெல்லாம் புகழப் புலவர் புதைத்தப்பெரும்பய னவமணித்தா மெடுத்தணிவதே யெளிதா மங்ஙனமீண்டு நானொரு புதுநூலாயினுந் தொன்னூலிற் கொருபுதுவழியாயினுங் காட்டுவ துணரா துயர்ந்த முன்னோர் தந்த நூலை விளக்குதற் கருதித் தெளிவு வேண்டி வேறுவேறாய்ச் சூத்திரந் தரினு மூத்தோ ருரைத்த பற்பலவற்றையும் பொருத்துதும். ஆயினுஞ் செந்தமி ழுணர்ந்தோர் வழியே யன்றிப் புறனடையாய்ச் சில விகற்பம் புறநூல் வழியே சென்று காட்டுதுமாகையான் முன்னோர் நூலினடையினும் விகற்ப நடையினு மெழுத்துச் சொற்பொருளியாப் பணியென வைந்திலக்கணங்களை யைந்ததிகாரமாக வீண்டு பிரித்துக் கூறுதும். கூறிய நடையில் வழுவினு முற்றரிதுணர்ந்தோ ரிலா தன்பொடு தாங்கிக் கண்ட வழுவினைத் தீர்ப்பது மீண்டையபொருளை யுரைத்த வழியிழிவெனினுந் துணிந்த கருத்து நன்றென வொருவாறிவற்றைக் கொள்வதுங் கடனே, எ-று.

சிறப்புப்பாயிரம்.—முற்றிற்று.





முதலாவது:—

# எழுத்ததிகாரம்.

## PART I.—LETTERS.

## முதலாவதெழுத்தியல்.

### Chapter I.—Nature of Letters.

**2.** தோற்றம்வகுப்புந் தோன்றும்விகாரமுஞ்
சாற்றுளித்தோன்றுந் தானெழுத்தியல்பே.

(இ-ள்.) எழுத்திலக்கண மாமாறுணர்த்துதும். எழுத்தின் றோற்றமும் வகுப்பும் விகாரமும் என்றிம்மூன்றனுள் எழுத்துவகைப்பாடெல்லா மடங்கும். என்னை, தோற்றமென்புழி, எழுத்துப்பிறக்குமிடமும், முறையும், எண்ணுமெனவும்; வகுப்பென்புழி, முதல்சார்புயிர் மெய்முதலியகூறுபாடெனவும்; விகாரமென்புழி, பதத்திலும் புணர்ப்பிலும் வருந்திரிபாக்கமுதலியவேறுபாடெனவுந்தோன்றும், எ-று. உளி எ-து. இடம், ஒழியென்பாருமுளர். (க)

**3.** உயிரிடை யினமிடறுரம்வலியுச் சிமெய்யியைய
முதலிடமாயிதழ் மூக்கணைப்பன்று
வைந்துணையிடத்தா மக்கரப்பிறப்பே.

(இ-ள்.) எழுத்தின்றோற்ற மாமாறுணர்த்துதும். உதானவாயுவின் காரணமாக எழுத்தெல்லாம் பிறக்குமாயினும் அவற்றுட்பன்னீருயிர்க்கும், ஆறிடையினத்திற்கும், மிடறேமுதலிடமாகவும்; ஆறுவல்லினத்திற்கும், நெஞ்சே முதலிடமாகவும்; ஆறுமெல்லினத்திற்கும், உச்சியேமுதலிடமாகவும்; அன்றி உதடும், மூக்கும், அண்ணமும், பல்லும், நாவும் என விவ்வைந்தே துணையிடமாகவும்; எழுத்தெல்லாம் பிறக்குமென்றுணர்க. ஆயினும் இவற்றையும் எழுத்தின்முறையையும் எண்ணையும் உணர்த்துவ தறுபயனின்றிப் பொழுதழிவாகையானும், இனிச் சிலவுரைப்பது முறையாமென்றமையானும், இங்ஙன மவற்றைநீக்கி எழுத்தின்வகுப்பும விகாரமுமெனு மற்றிரண்டையும் விளக்கிக்கூறுதும். இதன் விரிவையுணரவேண்டில் தொல்காப்பியத்துட் காண்க. அதனினும்விரிவு பேரகத்தியம் நன்னூல், எ-று. (உ)

முதலாவதெழுத்தின் றோற்றம்.—முற்றிற்று.



# இரண்டாவதெழுத்தின்வகுப்பு.

## Chapter II.—Classification of Letters.

**4.** முதல்சார்புயிரோ மூவினமெய்யே
முதற்கண்ணெழுத்தே மொழியீற்றெழுத்தே
யுயிர்மெய்குறி னெடிலோடுமாய்த
மாறுகுறுக்க மளபெடையிரண்டு
மாத்திரைப்புணர்பென வகைப்படுமெழுத்தே.

(இ-ள்.) எழுத்தின்வகுப்பா மாறுணர்த்துதும். இம்முதற்சூத்திரத்துள் இனிச்சொல்லக் குறித்தவகை யெல்லாந் தொகைப்படக்காட்டித்தந்தனம். ஆகையி லவ்வவச் சூத்திரத்துள் அவ்வவற்றை முறையேகாண்க. (க)

**5.** முதலெழுத்துயி ரீராறுடன்மூவாறே
சார்பெழுத்துயிர்மெய் தனியாய்தத்தோ
டஃகிய இ, உ, ஐ, ஔ மவ்வாய்த
முயிரளபொற்றள பொருபஃதென்ப.

(இ-ள்.) முதல்சார்பெழுத்தா மாறுணர்த்துதும். தமிழெழுத் தெல்லா முதலெழுத்தெனவுஞ் சார்பெழுத்தெனவும் இருவகைப்படும். இவற்றுட் பன்னீருயிரும், பதினெண்ணொற்றும், ஆக முதலெழுத் தொரு முப்பது மாம். சார்பெழுத்தோவெனில், உயிர்மெய்யும், ஆய்தமும்,குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக்குறுக்கமும், ஔகாரக்குறுக்கமும், மகரக்குறுக்க மும், ஆய்தக்குறுக்கமும், உயிரளபெடையும், ஒற்றளபெடையும் ஆகச்சார் பெழுத்தொருபஃதாகும், எ-று. முதலுக்கு, தலைமை-பிரதானம் எ-ம். சார் புக்கு, தலைமையின்மை, அப்பிரதானம், எ-ம். கூறுவர், எ-று. (உ)

**6.** எ, ஒவ்வும் றனழவ்வுமென்றைம்முதலு
முயிர்மெய்யுயிரள பொழியெண்சார்பு
மந்தமிழ்க்குரிய வாரியமும்பிறவே.

(இ-ள்.) முன்சொன்னவற்றிற்குச்சிறப்புவிதி விகற்பித்துணர்த்துதும். கூறியமுப்பது முதலெழுத்துள்ளே, எகர ஒகரங்களென்ன இரு குற்றுயிரெ ழுத்தும், ற ன ழ வென மூன்றொற்றும், ஆகமுதலெழுத்தைந்தும், கூறிய பத்துச் சார்பெழுத்துள்ளே, ஆய்தமும், ஒற்றளபும், ஆறுகுறுக்கமும் என வெண்சார்பெழுத்துந் தமிழ்மொழிக்குரியன, அன்றி யாரியமொழிக்குள் ளில்லன. சொன்னவிப் பதின்மூன்றொழித் தொழிந்த பத்துயிர் பதினெந் தொற்றென முதலெழுத் திருபத்தைந்து முயிர்மெய் யுயிரளபெனச் சார் பெழுத்திரண்டுமாகத் தமிழிற்கு மாரியத்திற்கும் பொதுவெழுத் திருபத்

தேழென்றுணர்க. அன்றியுந் தென்மொழிக் கில்லனவாகி வடமொழிக் குரியவெழுத் தெத்துணையோவெனில், ஆரியமொழியில் வழங்கு முயிர்பதி னாறுள்ளும் மெய்முப்பத்தேழுள்ளும் சொன்ன பொதுவெழுத்தன்றி உயி ராறும், ஒற்றிருபத்திரண்டுமாக வடமொழிக் குரியவெழுத் திருபத்தெட் டெனக்கொள்க. இங்ஙனம் ஆரியமொழிகளைத் தமிழிடத் தனைக்குங்கா லைப் பொதுவெழுத்தால் வரும்பதமே சிறப்புடைத்து; அல்லன வருதல் சிறப்பன்றெனக்கண்டுணர்க.—நன்னூல். "றன ழ எ ஒவ்வு முயிர்மெய்யு முயிரள பல்லாச்சார்புந்தமிழ் பிறபொதுவே," எ-று. (௬)

**7.** இடுகுறிகாரண மிவைபொதுச் சிறப்பென
வீரிரண்டாகு மெழுத்தின்பெயரே.

(இ-ள்.) தமிழில் வழங்கு நாற்பதுவகை எழுத்திங்ஙனம் வேறுவேறாய் விளக்கா முன்னோர் வழங்கு மவற்றின் பெயரைக் கூறுதும். அவைநால்வ கைப்படும். இடுகுறிப் பொதுப்பெயரும், இடுகுறிச் சிறப்புப்பெயரும், கார ணப் பொதுப்பெயரும், காரணச் சிறப்புப்பெயரு மென்றுணர்க. (உ-ம்) உயிரே, உயிர்மெய்யே, உடம்பே, என்பன இடுகுறிப்பொதுப்பெயர், அவற் றுள் அ, ஆ, க, ங முதலிய இடுகுறிச் சிறப்புப்பெயர். குறில், நெடில், வல் லினம், மெல்லினம், இடையினம்முதலிய காரணப்பொதுப்பெயர். குற்றிய லுகரங் குற்றியலிகரமுதலிய காரணச்சிறப்புப் பெயரெனக்கொள்க. ஆகை யில், (உ-ம்) நாகு, எனுமொழி யீற்றெழுத்து இடுகுறிப் பொதுப்பெயரால் உயிர், மெய், எ-ம். இடுகுறிச்சிறப்புப்பெயரால், கு, எ-ம். காரணப்பொதுப் பெயரால், குற்றெழுத்து, எ-ம். காரணச் சிறப்புப் பெயரால், குற்றியலு கரம் எ-ம். பிறவுமேற்கும் பெயரொடு வழங்கும், எ-று. (௭)

**8.** அம்முதலீராறுயிர் கம்முதன் மூவாறுடல்
குறில் அ, இ, உ, எ, ஒவ்வைந்தேநெடில்
ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ வேழே.

(இ-ள்.) உயிரு முடலுங் குறிலு நெடிலு மாமாறுணர்த்துதும். உயிரெ ழுத்துப் பன்னிரண்டு; (உ-ம்) அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ எ-ம். மெய்யெழுத்துப் பதினெட்டு; (உ-ம்) க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன். எ-ம். பன்னீருயிர்களுட் குற்றெழுத்தைந் து, (உ-ம்.) அ, இ, உ, எ, ஒ எ-ம். நெட்டெழுத்தேழு, (உ-ம்) ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எ-ம். வரும். உயிராய்வரினு மொற்றெறிந் துயிர்மெய்யாய் வரி னுங் குறில் குறிலே, நெடில் நெடிலேயாம். உயிருக்கு ஆவி, அச்சு, சுரம் எ-ம். மெய்க்கு, புள்ளி, உடல், உடம்பு, ஒற்று, அல், வியஞ்சனம் எ-ம். குற் றிற்கு, குறில், குறுமை, இரச்சுவம் எ-ம். நெடிற்கு, நெடில், நெடுமை, தீர்க்கம் எ-ம். கூறுவர், எ-று. (௮)

மொழிமுதலிடத்துக் குறுகும். (உ-ம்) ஔவியம், கௌவை எ-ம். வரும். சூத்திரம். "அளபெடைதனியிரண் டல்வழி ஐஔ,வுளதாமொன்றனை தனிமையுமாகும்" எ-ம். கூறினர். ஐகார ஔகாரக்குறுக்கமும் ஒவ்வொன்றே யாயினும் இடவகையால் ஐகாரக்குறுக்கமூன்றும் ஔகாரக்குறுக்க மொன்றுமாம். ஐகாரம் ஔகாரம் இடஞ்சார்ந்து தன்மாத்திரையிற்குறுகி ஒலித்தலின் காரணத்தால் முதலெழுத்தி னொலிவடிவின்வேறாய் ஐகார ஔகாரக் குறுக்கமெனப் பெயராய்ச் சார்பெழுத்தி னொன்றாயின, எ-று. (௧௩)

**17.** மகரம் ல ளக்கீழ்
வம்மேற் குறுகும்.

(இ-ள்.) மகரக்குறுக்கமாமாறுணர்த்துதும். இனிச்சொல்லும்படி லளத்திரிந்து னணவாகியபின் மகரம் வரி னதுகுறுகும். (உ-ம்) போலும், மருளும், என்பதற்கு போன்ம், மருண்ம், என்பதாம். என்னெனில், அம்மகரங் கான்மாத்திரையாகக் குறுகிநிற்கும். (உ-ம்) "சிதையுங் கலத்தைப்பயினாற் றிரிந்துந் திசையறியுமீகானும்போன்ம்." எ-ம். "வெயிலியல் வெஞ்சுரமைய நீ யெய்தின், மயிலியன்மாதுமருண்ம்." எ-ம். அன்றியு மகரவீற்றுமொழியின்கீழ். வகரம்வரின் மகரங்குறுகும். (உ-ம்) மரம்வளர்ந்தது, கமலம்விரிந்தது. எ-ம். வரும். மகரக்குறுக்கமொன்றே யாயினும் இடவகையான் மூன்றாகும். இடமும் பற்றுக் கோடுஞ்சார்ந்து மகரந் தன்மாத்திரையிற் குறுகி ஒலித்தலின் காரணத்தால் முதலெழுத்தி னொலிவடிவின் வேறாய் மகரக் குறுக்கமெனப் பெயராய்ச் சார்பெழுத்தினொன்றாயின, எ-று. (௧௪)

**18.** உயிர்நெடி லினக்குறி லுற்றள பெடுக்கு
மொற்றள பெழும்வே றுற்றுக்குறிற்கீ
ழியைந்து ர ழ வொழியிடை மெலியாய்தம்.

(இ-ள்.) அளபெடையாமாறுணர்த்துதும். அதுஉயிரளபெடை ஒற்றளபெடை யென விருவகைப்படும். அவற்றுள் உயிரளபெடையாவது, ஓசையுமளவும் பெறுவதுவேண்டி மொழியின்முதலே யிடையே கடையேநின்ற நெட்டெழுத் தெல்லா நீளப்பெறு மப்பொழு தொவ்வொன்றற் கினமாகிய குற்றெழுத்து வந்த அளபிற்குக்குறியாகநிற்கும். இவ்வாறு நெட்டெழுத்தேழு மளபெடுக்கும். அப்போததற் கதற்கினமாவன. ஆ அவ்வும், ஈ இவ்வும், ஊ உவ்வும், ஏ எவ்வும், ஐ இவ்வும், ஓ ஒவ்வும், ஔ உவ்வும், எனவினமாகும். (உ-ம்) ஆஅ-ஈஇ-ஊஉ-ஏஎ-ஐஇ-ஓஒ-ஔஉ என மொழி முதலினும், படாஅகை - பரீஇகம் - கொடூஉரம் - பேஎகம் - கடைஇயம்- புரோஒசை - அனௌஉகம் என மொழிக்கிடையினும், கனாஅ - குரீஇ - மரூஉ - விலேஎ - அசைஇ - அரோஒ என மொழிக்கடையினும் உயிர் அளபெடுத்துவந்தன. இவைசெய்யுட்கண்வருவன. அவைவருமாறு. (உ-ம்.) "ஓஒதல்

வேண்டு மொளி மாழ்குஞ் செய்வினை, யாஅது மென்னு மவர்." "உறாஅர்க்குறுநோ யுரைப்பாய் கடலைச், செறாஅஅய்வாழியநெஞ்சு." "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாணுசுப்பிற்கு, நல்லபடாஅபறை" என முறையேமொழிமுத லிடைகடை மூவிடத்தள பெடுத்தன. அன்றியும் ஔகாரம் மொழிக்கிடையினுங் கடையினும் வராமையானும் அவ்விடங்களில் அது நீங்கலாகி அளபெடுக்கும். அளபெடை பத்தொன்பதுடனே "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே, யெடுப்பதூஉ மெல்லாமழை." என இன்னிசை நிறைக்கவருமள பெடையும், "உரனசைஇ யுள்ளந் துணையாகச்சென்றார், வரனசைஇ யின்னுமுளேன்." எனச்சொல்லிசை நிறைக்கவரு மளபெடையுங்கூடி இருபத்தொன்றாதல் காண்க. முதலெழுத்தினொலி வடிவினும் வரிவடிவிற் குறியினும் வேறாய் நெட்டுயிர் தன்மாத்திரையி னீண்டளபெடுத்தலின் காரணத்தா னுயிரளபெடையெனப் பெயராய்ச் சார்பெழுத்தி னொன்றாயின.—சூத்திரம். "தனிநிலை முதனிலையிடைநிலையீறென, நால்வகைப் படூஉ மளபாய்வருமிடனே" எ-ம். "குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கு, நெட்டெழுத்திம்ப ரொத்தகுற்றெழுத்தே, ஐ ஔ வென்னுமாயீரெழுத்திற், கிகர வுகர மிசை நிறைவாகும்." எ-ம். கூறினார்.—நன்னூல். "இசைகெடின்மொழிமுத லிடைகடை நிலைநெடி லளபெழுமவற்றவற் றினக்குறில்குறியே." இவை மேற்கோள். இசைகெடினும் இசைகெடாவிடினும் வழக்கச் சொல்லிடத்து முயிரளபெடை வழங்கு மென்றுணர்க. அன்றியும் ஒற்றளபெடையாவது மெல்லினமாறும் ரழ வொழித்தொழிந்த இடையின நான்கும் ஆய்தமும் இரு குற்றெழுத்தின் கீழும் ஒரு குற்றெழுத்தின் கீழும் மொழியி னிடையினும் கடையினு நின்றளபெடுக்கும். எடுத்த வளபிற்குக் குறியாக இரட்டித்து வரும். (உ-ம்). அரங்ங்கம், முரஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, முரன்ன்று, குரவ்வ்வை, அரைய்ய்யர், குரல்ல்கள், திரள்ள்கள், வரஃஃகு என இரு குற்றெழுத்தின் கீழிடையினும்; மங்ங்கலம், மஞ்ஞ்சு, மன்ன்னு, பந்ந்து, அம்ம்பு, மின்ன்னு, தெவ்வ்வர், வெய்ய்யர், செல்ல்க கொள்ள்க, எஃஃகு, என ஒரு குற்றெழுத்தின் கீழிடையினும்; மடங்ங், உரிஞ்ஞ், அரண்ண், பொருந்ந், கனம்ம், பரன்ன், பகல்ல், திரள்ள் என இரு குற்றெழுத்தின் கீழ்க்கடையினும்; நங்ங், நஞ்ஞ், சண்ண், நந்ந், அம்ம், பொன்ன், தெவ்வ், செய்ய், கல்ல், வள்ள் என ஒரு குற்றெழுத்தின் கீழ்க் கடையினும் ஒற்றளபெடுத்துவந்தன. இவை செய்யுட்கண் வருவன. அவை வருமாறு. (உ-ம்) "இலங்ங்குவெண்பிறைசூ டீசனடியார்க்குக், கலங்ங்குநெஞ்சமிலைகாண்." "எங்ங்கிறைவ னுளனென்பாய்மனனேயா னெங்ங் கெனத்திரிவாரின்." "மடங்ங்கலந்தமனனேகளத்து,விடங்ங்கலந்தானைவேண்டு." "அங்ங்கணிந்தவருளிடத்தார்க்கன்புசெய்து, நங்ங்களங்கறுப்பாநாம்." என முறையே குறிலிணைக்கீழ் குறிற்கீழ் இடையினுங் கடையினும் நான்கிடத்தளபெடுத்தன. அன்றியும் ஆய்தம் குறிலிணைக்கீழ்க் குறிற்கீழ்க் கடையில்

வாராமையானும் அவ்விடங்களில் அது நீங்கலாகி அளபெடுக்குமளபெடை நாற்பதுடனே "விலஃஃகு வீங்கிரு ளோட்டுமேமாத நிலஃஃகு முத்தினினம்." "எஃஃகிலங்கிய கையராயின்னுயிர், வெஃஃகுவார்க்கில்லை வீடு." எனக்குறிலிணைக்கீழ்க் குறிற்கீழிடையில்வந்தஅளபெடையுங்கூடி நாற்பத்திரண்டாதல் காண்க. ஆயினும் ஒற்றள பெடை செய்யுளிடத்தே யன்றிப் பெறுதெனக் கொள்க. சூத்திரம். "வன்மையொடு ரஃகான் ழஃகானொழித்தாங், கன்மையாய்த்தமோ டளபெழுமொரோ வழி." எ-ம். கூறினர். நன்னூல். "ஙஞண நமன வயலளவாய்த மளபாங் குறிலிணை குறிற்கீழிடைகடை, மிகலேயவற்றின் குறியாம்வேறே." இவை மேற்கோள். ஆய்தம், உயிர்க்குறிலும், உயிர் மெய்க்குறிலும் இருமருங்கு நின் றெழுப்ப இருசிறகினு லெழும்பறவையி னுடல்போல எழுந்தொலித்தலால் இறுதிக்கண் விலக்கினர். ஒற்றுத் தன்மாத்திரையி னீண்டளபெடுத்தலின் காரணத்தான் முதலெழுத்தின் ஒலிவடிவினும் வரிவடிவிற் குறியினும் வேருய் ஒற்றள பெடையெனப் பெயராய்ச் சார்பெழுத்திஞென்றுயின. அளபெடைக்கு அளபு, புலிதம் எ-ம். கூறுவர், எ-று. (கரு)

**19.** கண்ணிமை கைந்நொடி காட்டுமாத்திரையி
லஃகியமவ்வு மாய்தமுங்காலே
உ இக்குறளொற் றாய்தமரையே
குறிலே ஐ ஔக்குற ளொற்றள பொன்றே
நெடிலிரண் டுயிரளபொரு மூன்றென்ப.

(இ-ள்.) மாத்திரையா மாறுணர்த்துதும். கண்ணிமையும் கைந்நொடியும் எழுத்தின் மாத்திரைக் களவாம். இவ்வளவின் றன்மையால், ஆய்தக் குறுக்கமும் மகரக்குறுக்கமும் கான்மாத்திரை. ஒற்றும், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் அரைமாத்திரை. குற்றெழுத்தும் ஐகாரக் குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் ஒற்றளபெடையும் ஒருமாத்திரை. நெட்டெழுத்து இரண்டுமாத்திரை. உயிரளபெடைமூன்றுமாத்திரை பெறுமெனக்கொள்க.—சூத்திரம். "உன்னல்காலே யூன்றலரையே, முறுக்கன் முக்கால் விடுத்த லொன்றே." எ-ம். கூறினர். அன்றியும் செய்யுட்கண் வேண்டுமிடத்து, குற்றியலிகரமும் குற்றியலுகரமும் உயிராகவெண்ணுதிருக்கவும் ; ஒற்றளபெடைவேண்டுமிடத்து உயிர்மெய்போல குற்றெழுத்தாக வெண்ணவும்;உயிரளபெடைநெட்டெழுத்தாகவும் குற்றெழுத்தாகவும்எண்ணவும்படும். (உ-ம்.) குறள். "குழலினிதியாழினிதென்பர் தம்மக்கள் மழலைச்சொற்கேளாதவர்." இதனுள்இயாழ்என்னுங் குற்றியலிகரம்எண்ணப்படாதென்க. "எஃஃகிலங்கியகையராயின்னுயிர், வெஃஃகுவார்க்கில்லைவீடு." இதனுள் ஈராய்தம்வந்த வொற்றளபெடை எண்ணப்படாதென்க. "கற்றதினாலாயபயனென் கொல்வாலறிவ, னற்றொழா அரெனின்." இதனுள்

உயிரளபெடை ஈரெழுத்தாக எண்ணப்பட்டதென்க. வேண்டுமிடத்து
எண்ணப்படாமையும் பெறும்.—யாப்பருங்கலம். "தனிநிலை வண்ணத்தாங்
கெடவரினே, குறுகிய விகரமுங் குற்றியலுகரமு, மளபெடை யாவியு மல
வியல்பிலவே." எ-து. மேற்கோள், எ-று. (கசு)

**20.** முதலீற்றுயிரிரு மொழியே சேர்புணி
இ ஈ எ ஐயீற்றியையும் யவ்வே
மற்றையுயிர்க்கீழ் வகரம்புணரும்.

(இ-ள்.) புணர்பெழுத்தாமாறுணர்த்துதும். உயிரான் முடிந்த சொல்
லும் உயிராற்றுவக்கின சொல்லுந் தம்முட் புணருங்கால் அவ்விரண்
டுயிர்நடுவே ஒரெழுத்திசைத்தல் வேண்டும். இசைப்படு மெழுத்தே புணர்
பெழுத் தெனப்படும். இ, ஈ, எ, ஐ, என்னு நிலைமொழி உயிரீற்றின்முன்
வருமொழி பன்னீருயிரும்புணரில் யகரவுடம்படு மெய்யாம். அ, ஆ,
உ, ஊ, ஒ, ஓ, ஔ, என்னு நிலைமொழி உயிரீற்றின்முன் வருமொழி பன்னீ
ருயிரும் புணரில் வகரவுடம்படு மெய்யாம். ஏகாரவீற்றின் முன் பன்னீருயி
ரும் புணரில் இவ்விருவிதியும் பெறும். (உ-ம்.) மணி+அழகு=மணியழகு;
தீ+எழுந்தது=தீயெழுந்தது; சே+அழகு=சேயழகு; கை+அழகு=கை
யழகு, எ-ம். மர+இலை=மரவிலை; பலா+இலை=பலாவிலை; கடு+இது=கடு
விது; பூ+இதழ்=பூவிதழ்; தே+அடிமை=தேவடிமை; கோ+அழகு=
கோவழகு; கௌ+எங்னன்=கௌவெங்னன். எ-ம். அரசனே+அவன்=
அரசனேயவன்; அரசனே+அவன்=அரசனேவவன். எ-ம். வரும். நன்
னூல் "இ ஈ ஐ வழி யவ்வு மேனையுயிர்வழிவவ்வு மேமுனிவ்விருமையு, மு
யிர்வரினுடம்படு மெய்யென்றாகும்" எ-து. மேற்கோள். எ-று. (கஎ)

இரண்டாவதெழுத்தின் வகுப்பு.—முற்றிற்று.

---

# மூன்றாவதெழுத்தின்விகாரம்.

## Chapter III.—Changes of Letters.

**21.** திரிபழி வாக்கந்
திரட்டுநால் விகாரம்.

(இ-ள்.) விகாரமா மாறுணர்த்துதும். பதத்தொடு பதம்புணருங் காற்
சந்திகாரணமாகப் பலமுறை நிலைப்பத வீற்றெழுத்தாயினும் வரும்பத முத
லெழுத்தாயினும் பலவிடத் தொருப்பட இரண்டும் வேறெழுத்தாகத் திரி
தலு முற்றுங் கெடுதலுமாகும். பலமுறை யிருபதநடுவே ஆக்கமாக ஒரெ

முத்து மிகலுமாம். இம்மூவிகார மன்றியுஞ் சிலமுறை இருபத மொருப தமாகத் திரண்டு கலப்புழிச் சிலவெழுத்து அவ்வழி விகாரப்படு மெனக்கொள்க. இவற்றுள், திரிதல்=ஆதேசம், எ-ம். கெடுதல்=உலோபம், எ-ம். மிகுதல்=ஆகமம், எ-ம். கலத்தல்=சங்கிரணம், எ-ம். வடமொழி யானே வழங்கும். தொகைப்படச் சொன்ன இந்நாலெழுத்தின் விகாரம் வகைப்பட விளங்குதற் கல்வழிப் பொருளும் வேற்றுமைப் பொருளும் விளக்கல் வேண்டும், எ-று. (க)

**22.** அல்வழி வேற்றுமை யாமிரண் டவற்றுள்
விரியினு முருபெடா வினைசார் பெயரே
யல்வழிப் பொருட்பெய ராகுமென்ப
வேற்றுரு பில்லது விரிக்குங் காலை
வேற்றுமைக் கொளினது வேற்றுமைப் பொருளே.

(இ-ள்.) அல்வழியும் வேற்றுமையு மாமாறுணர்த்துதும். வினைச்சொற் சார்ந்த முதற்பெயராகி விரியினும் வேற்றுமை உருபுபெறாதுநிற்கும் பெயரே அல்வழிப்பொருட்பெயர், எ-ம். முன்னேவேற்றுமை உருபு கொள்ளாதாயினும் விரிக்குங்காலை வேற்றுமை உருபு கொண்டுவரும் பெயரே வேற்றுமைப்பொருட்பெயர், எ-ம். கொள்க. விதியைவிளக்குதும். (உ-ம்) கல்லெடுத்தான், கல்வீடு, கல்லியல்பு என்பவற்று ளுருபுதோன்றாதாயினும் பொருளைவிரித்தாற் கல்லையெடுத்தான், கல்லாலாயவீடு, கல்லினதியல்பென றவ்வுருபுகூட்ட வேண்டினமையால் இதிலே கல்லென்னுஞ்சொல் வேற்றுமைப் பொருட் பெயரெனப்படும். அவ்வுருபு தோன்றாமலுங் கூட்டாமலும் விரித்துரைக்கப்படும் பெயர் அல்வழிப்பொருட் பெயரெனப்படும். (உ-ம்) கல்சிறிது, கல்லுயர்ந்தது. இதிலே கல் என்னுஞ் சொல் அவ்வுருபில்லாமையானும் பொருளை விரிக்க அவ்வுருபு கூட்ட வேண்டாமையானும் அல்வழிப் பொருட்பெய ரெனப்படும். அன்றியும் (உ-ம்.) பொன்னுடையான், என ஐ உருபு தொக்கியும்; பொன்னையுடையான், என விரிந்தும்; கல்லெறிந்தான், என ஆல் உருபு தொக்கியும்; கல்லா லெறிந்தான், என விரிந்தும்; கொற்றன் மகன் என கு உருபு தொக்கியும், கொற்றற்கு மகன்என விரிந்தும், மலைவீழருவிஎன இன் உருபு தொக்கியும்; மலையின் வீழருவிஎன விரிந்தும் ; மலையினுச்சி என அது உருபுதொக்கியும்; மலையினது வுச்சி என விரிந்தும்; மலைமுழை என கண்ணுருபுதொக்கியும் மலைக்கண் முழை என விரிந்தும்; வேற்றுமைப் புணர்ச்சி ஆறும்வந்தன. அன்றியும், (உ-ம்) கொல்யானை என வினைத்தொகையும், கருங்குதிரை என பண்புத் தொகையும், ஆயன்சாத்தன், சாரைப்பாம்பு என இருபெயரொட்டுப் பண்புத்தொகையும், பொற்சுணங்கு என உவமைத்தொகையும், இராப்பகல் என உம்மைத்தொகையும், பொற்றொடி என அன்மொழித்

தொகையும், கொற்றன் கொடுத்தான் என எழுவாய்த் தொடரும், கொற்றுகொள் என விளித்தொடரும், உண்ட சாத்தன் என பெயரெச்சத் தொடரும், உண்டு வந்தான் என வினையெச்சத்தொடரும், குண்டுகட்டெருமை எனக் குறிப்புவினை முற்றுத்தொடரும், உண்டான் சாத்தன் எனத் தெரிநிலைவினை முற்றுத்தொடரும், அதுமற்றம்ம என இடைச்சொற்றொடரும், நனிபேதை என உரிச்சொற்றொடரும், நெருப்பு நெருப்பு என அடுக்குத்தொடருங்கூடிய தொகைநிலை ஐந்தும்; தொகாநிலை ஒன்பதும்; ஆகிய அல்வழிப் புணர்ச்சி பதினான்கும் வந்தன. இவ்விருவழியிலும், தழாத் தொடருஞ் சிலவுண்டெனக்கொள்க. அவைவருமாறு. கைக்களிறு, எ-து கையையுடையகளிறு, என விரிக்கப்படுதலால் கை எ-து. களிறு என்பதைத் தழுவாமையால் இப்படி வருகின்றவைக ளெல்லாந் தழாத்தொடராகிய வேற்றுமைப் புணர்ச்சியாம். சுனையாழ வம்மிமிதப்ப, எ-து. சுனை மிதப்ப, அம்மியாழ எனக்கூட்டப்படுதலால் சுனை எ-து. ஆழ என்பதையும் அம்மி எ-து. மிதப்ப என்பதையுந் தழுவாமையால் இப்படிவருகின்றவைகளெல்லாந் தழாத்தொடராகிய அல்வழிப் புணர்ச்சியாம். (சொல்லில், வேற்றுமை யிலக்கணம் விரித்துக் கூறுதும்.) எ-று. (உ)

**23.** வலிவரின் மஃகான் வருக்கமாகு
நவ்வரின் றனிக்குறின் மவ்வுநவ்வா
மவ்வழியன்றி மகரங் கெடுமே.

(இ-ள்.) மகரவிகார மாமாறுணர்த்துதும். ஈற்றுமகரத்தின்கீழ் க ச த மொழிக்கு முதல்வரின் இவற்றிற்கினவெழுத்தாக மகரந் திரிந்து முறையே ங், ஞ், ந், என அதற்கதற்கு வருக்கவெழுத்து வருமெனக் கொள்க. (உ-ம்.) மனம்+களித்தது = மனங்களித்தது, எ-ம். மனம்+சலித்தது = மனஞ்சலித்தது, எ-ம். மனம்+தளர்ந்தது = மனந்தளர்ந்தது, எ-ம். பிறவுமன்ன. அன்றியும், ஈற்று மகரத்தின்கீழ் நம்முதல் வந்தால் அம்மகரங்கெடும். (உ-ம்.) மனம்+நலம் = மனநலம், எ-ம். முகம்+நிறம்=முகநிறம், எ-ம். பிறவுமன்ன. அன்றியு மகரவீற்றுமொழி தனிக்குறிலாயின் மகரந்திரிந்து நகரமாம். (உ-ம்.) வெம்+நீர்=வெந்நீர், எ-ம். செம்+நெல்=செந்நெல், எ-ம. பிறவுமன்ன. எ-று. (௩)

**24.** ண ன முன்தகரம் ட ற வாமுறையே
ண ன வல்வழிக்கென்று மியல்பாம்
வேற்றுமைப்பொருட்கவை வலிவரின் ட ற வாம்
ண ன முன்குறில்வழி நகரம் ண ன வா
மற்றது ண ன முன்மாய்ந்து கெடுமே.

(இ-ள்.) ணகார னகாரங்களால் வரும் விகாரமாமாறுணர்த்துதும். ஈற்று ணகரத்தின்கீழ் மொழிமுதல்வரும் தகரந்திரிந்து டகரமாகவும், ஈற்

று னகரத்தின்கீழ் மொழிமுதல்வரும் தகரந்திரிந்து றகரமாகவும் பெறும். (உ-ம்.) கண்+திறந்தது=கண்டிறந்தது, எ-ம். மின்+தெளிந்தது=மின்றெளிந்தது. எ-ம். பிறவுமன்ன. அன்றியும், ணனவீற்றுமொழிகள் அல்வழிப் பொருட்புணர்ச்சியில் நகரமொழிந்த எவ்வின வெழுத்துவரினும் திரியாதியல்பாம். (உ-ம்.) மண்கடிது, மண்சிறிது, மண்டீது, மண்பெரிது, மண்ஞான்றது, மண்மாண்டது, மண்யாது, மண்வலிது எ-ம். பொன்கடிது, பொன்சிறிது, பொன்றீது, பொன்பெரிது, பொன்ஞான்றது, பொன்மாண்டது, பொன்யாது, பொன்வலிது எ-ம். வரும். ஆயினும் உருபினாற்றோன்றுமற் பொருளினால் வேற்றுமையினால் வரும் ஈற்றுணனவின் கீழ் மொழிமுதல் வல்லினம் வரின் ணகரம் டகரமாகவும் னகரம் றகரமாகவுந்திரியும். (உ-ம்.) மண்+குடம்=மட்குடம், மண்+சாடி=மட்சாடி. மண்+தாழி=மட்டாழி, மண்+பானை=மட்பானை, எ-ம். பொன்+குடம்=பொற்குடம், பொன்+சாடி=பொற்சாடி, பொன்+தாழி=பொற்றாழி, பொன்+பானை=பொற்பானை, எ-ம். பிறவுமன்ன. அன்றியும், ணனவீற்று மொழிகள் தனிக்குறிலாயின் மொழிமுதல் வரும் நகரந்திரிந்து முறையே ணகர னகரமாகும். (உ-ம்.) கண்+நெடிது = கண்ணெடிது, எ-ம். மின்+நெடிது=மின்னெடிது, எ-ம். வரும். அன்றியும், ணன வீற்று நிலைப்பதங்கள் தனிக்குறி லல்லாதாயின் மொழிமுதல் வரும் நகரங்கெடும். (உ-ம்.) கவண்+நெடிது=கவணெடிது, எ-ம். கலன்+நெடிது=கலனெடிது, எ-ம். தூண்+நெடுமை=தூணெடுமை, எ-ம். மான்+நெடுமை=மானெடுமை, எ-ம். பிறவுமன்ன.—நன்னூல். "ணன வல்லினம் வரட்டறவும் பிறவரி னியல்புமாகும் வேற்றுமைக் கல்வழிக் கனைத்து மெய்வரினுமியல்பாகும்மே," எ-து. மேற்கோள். எ-று. (௪)

25 தேனெனுமொழிமெய் சேரிருவழியுந்
தானியல்பாமெலிவரின் றன்னீற்றழிவும்
வலிவரினீறுபோய் வலிமெலிமிகலுமா
மின்பின்னுவ்வுயில் வன்மையுமிகுமே
யென்றன்வலிவரி னியல்புந் திரிபுமா
நின்னென்றுமியல்பாய் நிற்குமென்ப
வூன்குயினியல்பா முற்றவேற்றுமைக்கு
மெகின்மரமல்லதே விருவழியியல்பு
மவ்வுழிவலிவரின் வலிமெலிமிகலுமாம்.

(இ-ள்.) முன்சொன்ன விதியிற் சில விகற்பமாமாறுணர்த்துதும். தேனெனுமொழி எவ்வகை மெய்வரினும் இயல்பாதலு மெல்லினம்வரின் னகரங்கெடுதலும் வல்லினம்வரின் னகரங்கெட்டு வல்லெழுத்து மெல்லெழுத்து மிகுதலுமாகும் வேற்றுமையிடத்தும் அல்வழியிடத்து மென்ப. (உ-ம்.)

தேன்கடிது, தேன்சுவை, இயல்பாயின. தேன்+குடம்=தேக்குடம், தேன்+கடிது=தேக்கடிது, என இருவழியும் ஈறுகெட்டு வலிமிக்கன. தேன்+மொழி=தேமொழி, தேன்+மாண்டது=தேமாண்டது, என இருவழியும் ஈறுகெட்டன. அன்றியும், மின் பின் என்னும் இருமொழிஈற்றில் வல்லினம்வரின் உகரம் பெற்று வல்லொற்றிரட்டும் வேற்றுமை யிடத்தும் அல்வழியிடத்தும். (உ-ம்.) மின்+கடிது=மின்னுக்கடிது, பின்+கடிது=பின்னுக்கடிது, எ-ம். மின்+கடுமை = மின்னுக்கடுமை, பின்+கடுமை = பின்னுக்கடுமை, எ-ம். வரும். இவற்றுள் சிறிது-பெரிது-தீது, எ-ம். சிறுமை-பெருமை-தீமை, எ-ம். முறையே கூட்டிக்காண்க. அன்றியும், தன் என் என்னும் இருமொழி ஈற்றில் வல்லினம்வரின் இயல்புந் திரிபுமாம். நின் என்னும் மொழியீற்றில் வல்லினம்வரின் எப்போதுமியல்பாம். (உ-ம்.) தன்பகை-என்பகை என இயல்பாயின. தன்+பகை=தற்பகை, என்+பகை=எற்பகை, என ஈறுதிரிந்தன. நின்பகை,என இயல்பாயின. நிற்பகை,என வாரா. அன்றியும், ஊன், குயின், என்னும் இருமொழி ஈற்றில் வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லினம்வரின் திரியாதியல்பாம். (உ-ம்.) ஊன்கடுமை, ஊன்றீமை, எ-ம். குயின்குழாம்,குயின்றிரள், எ-ம்.வரும். (குயின்=மேகம்.) அன்றியும், எகின் எ-து. புளியமரமுதற் பன்மரமும், அன்னம், கவரிமா, புள்ளிமான், நீர்நாய், என்றிவையாகும். இவற்றுண் மரமல்லாதன எகின் என்னுமொழி இருவழியு மூவினம் வரின் இயல்பாகவும், வல்லினம்வரின் அகரச்சாரியை பெற்று வல்லொற்று மெல்லொற்று மிகவும்பெறும். (உ-ம்.) எகின்+கால்=எகின்கால், எ-ம். எகின்+பெரிது=எகின்பெரிது, எ-ம். இருவழியிலும் இயல்பாயின. எகின்+கால்=எகினக்கால், எ-ம். எகின்+கால்=எகினங்கால், எ-ம். எகின்+பெரிது=எகினம்பெரிது, எ-ம். எகின்+பேடை=எகினப்பேடை, எ-ம். இருவழியிலும் வலிமெலி மிக்கன. எகின்+அழகு=எகினவழகு, எ-ம். எகின்+வலிது=எகினவலிது, எ-ம். மற்றை எழுத்துப்புணர்வழி அகரம்பெற்றவாறு காண்க. பிறவுமன்ன. எ-று. (கு)

**26.** ளவேற்றுமையிற் றடவுமல்வழி
யவற்றோடுறழ்வும் வலிவரின் தவ்வரி
னியல்புந்திரிந்தபின் கெடுதலுமாகும்
ளத்தனிக்குறிற்கீ ழல்வழித்தவ்வரின்
திரிந்தொழிந்தாய்தஞ் சேருமென்ப
ளமுன்மெலிவரி னிருவழினணவா
மவற்றுணத்திரிந் தழிவாந்தனிக்குறி
னண்ணியலளமுன் நவ்வுனணவாம்,

(இ-ள்.) லகார ளகாரங்களின் விகாரமாமாறுணர்த்துதும். லளவீற்று நிலைப்பதங்கள் வேற்றுமைப் பொருளாய் வல்லின முதற்பதத்தோடு புண

ருங்காலை லகரம் றகரமாகவும், ளகரம் டகரமாகவும் திரியும். (உ-ம்.) கல்+புறம்=கற்புறம், நூல்+புறம்=நூற்புறம், விரல்+புறம்=விரற்புறம், சாரல்+புறம்=சாரற்புறம், எ-ம். முள்+புறம்=முட்புறம், வாள்+புறம்=வாட்புறம், புரள்+புறம்=புரட்புறம், எ-ம். திரிந்தன. பிறவுமன்ன. அல்வழியிடத்தோவெனில், இயல்புந்திரிபுமாம். (உ-ம்.) கல்பெரிது, விரல்சிறிது, வாள்பெரிது,எ-ம். இயல்பாயின. கல்+பெரிது=கற்பெரிது, வாள்+பெரிது வாட்பெரிது,எ-ம்.திரிந்தன.பிறவுமன்ன. வேற்றுமைப்புணர்ச்சியில் லகார, ளகாரவீற்றில் தவ்வணையின் வருமொழிமுதலும் நிலைமொழியீறுந் திரியும். (உ-ம்.) நூல்+தலை=நூறலை, நூற்றலை; கடல்+திரை=கடறிரை, கடற்றிரை; வாள்+திறல்=வாடிறல், வாட்டிறல்; அவள்+தாய்=அவடாய், அவட்டாய்; எ-ம். இருமொழி திரிந்தன. பிறவுமன்ன. அல்வழிப்புணர்ச்சியில் தனிக்குறிலல்லாத லகர ளகரவீற்றில் தவ்வணையில் இயல்புங் கெடுதலுமாம். (உ-ம்.) பொறுத்தல்+தலை=பொறுத்தறலை, அவள்+தந்தாள்=அவடந்தாள், எ-ம்.திரிந்தன. பிறவுமன்ன. அன்றியும், பொறுத்தல்தலை, அவள் தந்தாள், எ-ம். வழக்கிடத்தாகும். அல்வழிப் புணர்ச்சியில் தனிக்குறில் லகர ளகரவீற்றில் தவ்வணையின் லகரம் றகரமாகவும், ளகரம் டகரமாகவும், ஆய்தமாகவும்பெறும். (உ-ம்.) கல்+தீது=கற்றீது, கஃறீது; பல்+தொடை=பஃறொடை, அல்+திணை=அஃறிணை, எ-ம். முள்+தீது=முட்டீது, முஃடீது, எ-ம். பிறவுமன்ன. அன்றியும்,நிலைமொழி லகரளகரவீற்றில் மெல்லினம்வரின் லகரம் னகரமாகவும், ளகரம் ணகரமாகவும்திரியும் வேற்றுமையிடத்தும் அல்வழி யிடத்தும். (உ-ம்.) கல்+மலை=கன்மலை, முள்+முடி=முண்முடி, எ-ம். கல்+முளைத்தது=கன்முளைத்தது, முள்+முரிந்தது=முண்முரிந்தது, எ-ம். இருவழியுந் திரிந்தன. பிறவுமன்ன. தனிக்குறிலல்லாத லகரளகரவீற்றில் நகரம்வரின் லகர ளகரந்திரிந்து நகரங்கெட்டு னகர ணகரமாகும். (உ-ம்.) விரல்+நீளம்=விரனீளம், கால்+நீளம்=கானீளம், நூல்+நுனி=நூனுனி, எ-ம். இருள்+நீண்டது=இருணீண்டது, கோள்+நீண்டது=கோணீண்டது, வாள்+நுனி=வாணுனி, எ-ம். பிறவுமன்ன. இவ்வாறன்றி, தனிக்குறிலணைந்த லகரளகரவீற்றில் நகரம்வரின் லகரளகரந் திரிந்து நகரங்கெட்டு னகர ணகரமாகும். (உ-ம்.) கல்+நெஞ்சு=கன்னெஞ்சு, முள்+நிலம்=முண்ணிலம், எ-ம். வரும். எ-று. (௬)

## 27. சஞயவரின் ஐஅச்சமமெனத்திரியும்.

(இ-ள்.) அகரவைகாரங்களின்விகாரமாமாறுணர்த்துதும். மொழிக்கு முதலினும் மொழிக்கு இடையினும் நின்ற அகர ஐகாரங்கள் ச ஞ ய வரின் தம்மில்வேறுபாடின்றி ஒன்றற்கொன்றாகத்திரியும். (உ-ம்.) பசல்,பைசல், மஞ்சு, மைஞ்சு, அய்யர், ஐயர், எ-ம். மொழிமுதல் அகரம், ஐகாரமாகத்திரிந்தது. அரசு,அரைசு; முரஞ்சு, முரைஞ்சு; அரயர், அரையர்; எ-ம். மொ

ழியிடை அகரம் ஐகாரமாகத் திரிந்தது. இவையே மொழிமுதற்போலி, மொழியிடைப்போலி, எ-ம். கூறுவர். அன்றியும், ஐந்நூறு, ஐஞ்ஞூறு; மைந்நின்றகண், மைஞ்ஞின்றகண்; மெய்ந்நின்ற விளக்கு, மெய்ஞ்ஞின்றவி ளக்கு; எ-ம். வரும். மொழிக்கடைப்போலி. (உ-ம்.) நலம், நலன்; குலம், குலன்; குளம்,குளன்; பழம்,பழன்; பயம், பயன்; கடம், கடன்; அகம், அகன்; மனம், மனன்; எ-ம். சுரும்பு, சுரும்பர்; கொம்பு, கொம்பர்; வண்டு, வண்டர்; மாது, மாதர்; சாம்பல், சாம்பர்; பந்தல், பந்தர்; அனந்தல், அனந்தர்; குடல், குடர்; அரும்பு,அரும்பர்; எ-ம். வரும். நன்னூல்.—"அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்." எ-து. மேற்கோள். எ-று. (எ)

**28.** அடைமொழிஉக்குறள் ஐயாதலுமாம்.

(இ-ள்.) குற்றியலுகர விகாரமாமாறுணர்த்துதும். குற்றிய லுகரவீற் றுச்சிலபதம் அடைமொழியாய் நின்று தொகைப்பொருளாக மற்றொரு பதத்தோடும் பகுபதமாக விகுதியுருபோடும் புணருங்காலை உகரந்திரிந்து ஐயாகவும் பெறும். (உ-ம்.) ஆண்டு, ஆண்டை; ஈண்டு, ஈண்டை; யாண்டு, யாண்டை; மற்று, மற்றை; இன்று, இன்றை; அன்றுவாக்கியம், அற்றை வாக்கியம்; பண்டுசெய்தி, பண்டைச்செய்தி; இன்றுநாள், இற்றைநாள்; நேற்றுகூலி, நேற்றைக்கூலி; மூவாண்டுநெல், மூவாட்டைநெல், எ-ம். பிறவுமன்ன. தொகைப்பொருளாக உகரந்திரிந்தவாறு காண்க. ஈராட்டை யான், பண்டையான், மற்றையவர், என பகுபதமாக உகரந்திரிந்தவாறு காண்க. அன்றியும், அளவடியான்வரும் கலிவிருத்தமட்டைவிருத்த மெ ன்பார் இன்றைப் புலவருட் சிலர்.—நன்னூல். "ஐயீற்றுடைக்குற் றுகர முமுளவே." எ-து. மேற்கோள். எ-று. (அ)

**29.** தெவ்வென்பதிருவழி உவ்வெய்திச்சேரும்
வலிமிகுமவ்வரின் வவ்வுமவ்வாமென்ப.

(இ-ள்.) இனிச் சிலசிறப்பு விதிகளை யுணர்த்துதும். தெவ் என்னுமொ ழி வல்லினத்தோடுபுணரின் உகரமெய்தி வல்லினமிகுதலும், மகரத்தோடு புணரின் வகரங்கெட்டு மகரமிகுதலுமாம். (உ-ம்.) தெவ்+கடிது=தெவ் வுக்கடிது, தெவ்+கடுமை=தெவ்வுக்கடுமை, எ-ம். தெவ்+மன்னர்=தெம் மன்னர், தெவ்+முனை=தெம்முனை, எ-ம். வரும். தெவ், எ-து. பகை— நன்னூல். "தெவ்வென்மொழியே தொழிற்பெயரற்றே, மவ்வரின்வஃ கான் மவ்வுமாகும்." எ-து. மேற்கோள். எ-று. (கூ)

**30.** யரழமுன்வலிவரினல்வழிக்கியல்பு
மடைமொழிக்காக்கமு மவைவேற்றுமைக்கண்
மிகலுந்தன்னின மெலிமெய்தலுமாம்.

(இ-ள்.) ய ர ழ என்னு மூன்றொற்றையும் ஈற்றிலேயுடைய நிலைமொழி முன்னே க ச த ப வருமொழிமுதல்வந்து புணர்ந்தால் அல்வழியில் மிகாமல் இயல்பாம். (உ-ம்.) நாய்சிறிது, தேர்சிறிது, வீழ்சிறிது, எ-ம். வரும். அன்றியும், நிலைமொழிப்பதம் தொகைப்பட்டு அடைமொழியாகநின்றால் வருமொழிப்பத முதலில்வல்லினமிகும். (உ-ம்.) பொய்+செல்வம்=பொய்ச்செல்வம், கார்+பருவம்=கார்ப்பருவம், பாழ்+கொல்லை=பாழ்க்கொல்லை, எ-ம். வரும். இவைமூன்றும்பண்புத்தொகை. அன்றியும், அம்மூன்றொற்றையும் ஈற்றிலேயுடையநிலைமொழிப்பதங்கண்முன் வேற்றுமையில் வல்லினமுதன்மொழிவந்து புணர்ந்தால் வல்லினமிகுதலு மெல்லினமுறழ்தலுமாகும். (உ-ம்.) வேய்+குறை=வேய்க்குறை, வேர்+குறை=வேர்க்குறை, வீழ்+குறை=வீழ்க்குறை, எ-ம். வேய்+குறை=வேய்ங்குறை, வேர்+குறை=வேர்ங்குறை, வீழ்+குறை=வீழ்ங்குறை, எ-ம். வேற்றுமைவழிக்கண் வல்லின மிக்கது மெல்லின முறழ்தலுமாயினவாறு காண்க, எ-று. (௩௦)

**31.** சிலபலதம்மொடு சேர்புளியியல்பு
முதன்மெய்க்கடைமெய் மிகலுமீறுபோய்
லறவ்வாதலும் லாவாதலுமாம்
பிறவரினகர நிற்றலுங் கெடலுமாம்.

(இ-ள்.) சிலபலவென்னும் இவ்விருசொல்லும் இரட்டித்து வருங்கால் இயல்பாய் நிற்கவு முதலொற்றாயினுங் கடையொற்றாயினு மிக்கு வரவும், அகரங்கெட்டு லகரம் றகரமாகவும் பெறும். (உ-ம்.) பலபல், சில சில், என இயல்பாயின. பலப்பல, சிலச்சில, என ஒற்றுமிக்கன. பற்பல, சிற்சில, என அகரங்கெட்டு லகரம் றகரமாயின. பல்லபல, சில்லசில, என லகரமிக்கன. ஒரோவிடத்து ல லாவாகத்திரியும். (உ-ம்.) பலாம், சிலாம். எ-ம். அன்றியும், பிறமொழிபுணருங்கால் அகரம் நிற்கவு நீங்கவுமாம். (உ-ம்.) பல்கலை, என அகரநீங்கிற்று. பற்கலை, என அகரநீங்கி லகரம் றகரமாயிற்று. பலநாள், என அகரநின்றது. பன்னாள், என அகரங்கெட்டு லகரம் னகரமாயிற்று. பல்மணி, பன்மணி; பலவணி, பல்லணி; பலவாயம், பல்லாயம்; பலவலை, பல்வலை; பல்ஞானம், பன்ஞானம், எ-ம். வரும். ஆயினுந் தகரம்வரின் இயல்பாகவும், அகரம்போய் இருபத்தாறாஞ் சூத்திரத்தின்படி தனி றவ்வெய்தி ஆய்தம்வரவுமாகும். (உ-ம்.) பல்+தொடை=பஃறொடை, பல்+தாழிசை=பஃறாழிசை, எ-ம். பிறவுமன்ன. பல்பல, சில்சில, எ-ம். வரும், எ-று. (௧௧)

**32.** ஆமாவல்வழி ஆவீறுமுற்று
மியாவிவைமுன்வலி மிகாதியல்பாகும்.

(இ-ள்.) அல்வழிவந்த ஆமாவென்ற இருபெயரும் மியாவென்ற அசைச்சொல்லும் ஆவீற்ற வெதிர்மறை முற்றுவினையும் எனவிவை வல்லின

த்தோடு புணருங்கால் ஒற்றிரட்டாவெனக் கொள்க. (உ-ம்.) ஆகறந்தன, மாபயந்தன, ஆசிறிய, மாபெரிய, எ-ம். கேண்மியாகோதாய், சொன்மியாபா வாய், எ-ம். தின்றுகுதிரை, கடலோடா கால்வநெடுந்தேர், எ-ம். இவற் றைச் சிறப்பித்து விளக்கினமையால் ஆவீற்றமற்றைப் பெயரும், முற்று வினையல்லன வினையும்வரின் வல்லின மிரட்டுமெனக் கொள்க. (உ-ம்.) புறப்பறப்பன, கடாப்பெரிய, மிடாச்சிறிய. ஓடாக்குதிரையுமுழாக்காளையு மாகா. ஓடாத உழாத என வரின் வல்லினமிரட்டா.—நன்னூல். "அல் வழியாமா மியாமுற்றுமுன்மிகா." எ-து. மேற்கோள். எ-று. (கஉ)

**33.** தனிக்குறிலீற்றுத் தரும்பெயர்செய்யுட்கே
ஆஅவ்வாதலுமதனோ டுவ்வணையலுமாம்.

(இ-ள்.) செய்யுளிடத்துத் தனிக்குறிற்கீழே ஆகாரவீற்றுச்சில பெயர் முன்னே பலபெயர் வருங்கால் அவ்வாகாரங்குறுகி அகரமாகவும், அகர மாயினபின் உகரமிணைந்து வரவும், பெறுமெனக்கொள்க. (உ-ம்.) சுறம றிவன துறையெலா நிலவிரிகானல்வாய், எ-ம். நிலவுபாய்ந்த கடலிற் சுறவுபாய்ந்து களித்தன, எ-ம். இருவகை விகாரம் வந்தவாறுகாண்க. அன் றியும். (உ-ம்.) இரா-இரவு, புறா-புறவு, சுறா-சுறவு, நிலா-நிலவு, விளா-விளவு, பலா-பலவு, என இயல்பாகியுங் குறுகியும் உகரம்பெற்றும் வழக் கிடத்துவரும்.—நன்னூல். "குறியதன்கீழாக்குறுகலு மதனோ, டுகரமேற் றலுமியல்புமாந் தூக்கின்." எ-து. மேற்கோள். எ-று. (கங)

**34.** தமிழ்வேற்றுமைக் கச்சாரவும்பெறுமே.

(இ-ள்.) தமிழ் என்னுஞ்சொல்லே வேற்றுமைப்பொருளாக வருங் கால் அகரச்சாரியை பெற்றும், பெறுமையும், வருமெனக்கொள்க. (உ-ம்.) தமிழ்க்கூற்று, தமிழ்ச்சொல், என அகரச்சாரியை பெறுது வந்தன. தமிழப்பல்லவதரையர், தமிழநாகன், தமிழவளவன், தமிழவரசன், என அகரச்சாரியைபெற்று வந்தன.—நன்னூல். "தமிழவ்வுறவும் பெறும் வேற்றுமைக்கே." எ-து. மேற்கோள் எ-று. (கச)

**35.** தனிவழிஐயுந் தனிக்குறில்யவ்வுந்
துவ்வுநொவ்வுந் தொடர்மெலிமிகுமே.

(இ-ள்.) ஓரெழுத்து மொழியாகவரும் ஐகாரமும், தனிக்குற்றெழு த்துக் கூடின யகரமும், ஏவற்சொற்களாகிய, து, நொ, என்றிருமொழி களும் நிலைப்பதமாகி, வரும்பதமுதற்கண் மெல்லினம் புணரின் அல்வழி யானும் வேற்றுமையானும் ஒற்றிரட்டும். (உ-ம்.) கை+மாறினது=கைம் மாறினது, கை+மாற்று=கைம்மாற்று, கை+ஞான்றது=கைஞ்ஞான்றது, கை+நீண்டது = கைந்நீண்டது, மெய்+ஞான்றது = மெய்ஞ்ஞான்றது,

மெய்+மாண்டது=மெய்ம்மாண்டது, மெய்+நீண்டது=மெய்ந்நீண்டது, என அல்வழியிலும், கைஞ்ஞாற்சி, மெய்ந்நீட்சி, மெய்ம்மாட்சி, என வேற்றுமையிலும், ஒற்றுமிக்கன ; துந்நாடா, தும்மாடா, கொந்நாகா, கொம்மங்கா, எனவேவற்சொல்லினு மிக்கன. அன்றியும், துய்யவனே, துவ்வளவா, கொய்யவனே, கொவ்வளவா, எ-ம். வரும். எ-று. (௩௫)

**36.** *தனிக்குறின்மெய்யுயிர் சார்புளிமிகும்ரழத்*
*தனிக்குறிற்சாரா தாமுமிகாவென்ப.*

(இ-ள்.) தனிக்குறில் நிலைப்பதத்திற்று ஒற்றெழுத்தெல்லாம் உயிர் தொடர்ந்துவரின் இரட்டிடும். (உ-ம்.) கண்+அழகு=கண்ணழகு, கம்+அழகு=கம்மழகு, பொன்+அழகு=பொன்னழகு, மெய்+அழகு=மெய்யழகு, கல்+அழகு=கல்லழகு, தெவ்+அழகு=தெவ்வழகு, புள்+அழகு=புள்ளழகு, எ-ம். வரும். அன்றியும், ர ழ வென இரண்டொற்றுந் தனிக்குறின் மொழியீற்றின்கண் வரவும் இரட்டவும் பெறாதெனக் கொள்க.—நன்னூல். "தனிக்குறின்முன்னொற் றுயிர்வரினிரட்டும்." எ-து. "ரழத்தனிக்குறிலணையா." எ-து. மேற்கோள். எ-று. (௩௬)

**37.** *மெலிவுறிற்பாவிடை மென்மைவன்மை*
*குறுமைநீட்சி குறுந்தொகைவிரிவே*
*மற்றொருமொழிமூ வழிகுறைதலுமென*
*வேண்டுளித்தனிமொழி விகாரமொன்பதே.*

(இ-ள்.) சந்திகாரணமாக வரு முன் காட்டிய எழுத்தின் விகாரங்களன்றியே தனித்தொரு மொழியின் வரும் விகாரங்களினை யுணர்த்துதும். அவையொன்பதாம். மெலித்தலும் வலித்தலும் குறுக்கலும் நீட்டலும் தொகுத்தலும் விரித்தலும் அன்றி, ஒருமொழிதானே முதல் இடை கடை என மூவிடத்துக் குறைதலுமாம். (உ-ம்.) வாய்ந்தது, எ-து. வாய்த்தது என வலித்தல் விகாரம். தட்டை, எ-து. தண்டை என மெலித்தல் விகாரம். நிழல், எ-து. நீழல் என நீட்டல் விகாரம். பாதம், எ-து. பதம் எனக்குறுக்கல் விகாரம். தண்டுறை, எ-து. தண்ணந்துறை என விரித்தல் விகாரம். வேண்டாதார், எ-து. வேண்டார் எனத்தொகுத்தல் விகாரம். அன்றியும், தாமரை, எ-து. மரையிதழ்புரைய மஞ்செஞ்சீறடி என மொழிமுதற் குறைந்த விகாரம். யாவர், எ-து. யார் என மொழியிடைக்குறைந்த விகாரம். நீலம், எ-து. நீலுண்டகண், நீனிறப்பகடு என மொழிக்கடைக் குறைந்த விகாரம். இவ்வொன்பது விகாரங்களுள் சில சிறு பான்மை யாகையிற் றானேவழங்காதவற்றை இலக்கியங்களுட் காண்புழி யறிந்துகொள்க. இவை செய்யுள் விகாரம். அன்றியும், புணர்ச்சிவிகாரமும், புணர்ச்சியில் விகாரமும் சிலவுள. (உ-ம்) நிலவலையம், பொற்

குடம், வாழைப்பழம், எ-ம். வரும். இவை புணர்ச்சி விகாரம். புணர்ச்சியில்விகாரம் ஏழாகும். முதலாவது தோன்றல். (உ-ம்.) குன்று-குன்றம், செல்-உழி, செல்வுழி, எ-ம். இரண்டாவது, திரிதல். (உ-ம்.) மாகி, மாசி, எ-ம். மூன்ருவது, கெடுதல். (உ-ம்.) யார்-ஆர், யாவர்-யார், எ-ம். நான்காவது நீளல். (உ-ம்.) பொழுது-போது, பெயர்-பேர், எ-ம். ஐந்தாவது, நிலைமாறுதல். (உ-ம்.) வைசாகி, வைகாசி, நாளிகேரம், நாரிகேளம், தசை, சதை, ஞிமிறு, மிஞிறு, சிவிறி, விசிறி, எ-ம். ஆருவது, மருவி வழங்குதல். (உ-ம்.) என்றந்தை, எந்தை, எ-ம். ஏழாவது, ஒத்துநடத்தல். (உ-ம்.) நண்டு, ஞண்டு, நெண்டு, ஞெண்டு, நமன், ஞமன், எ-ம். வரும். எ-று. (கஎ)

**38.** இருமொழி யொருமொழி யெனச்சங்கீர்தமாய்
நிலைமொழியீற்றுயிர் நீங்கலுமதனோ
டணைமொழிமுதற்கண் அ ஆவாதலும்
இ ஈ ஏ யாதலும் உ ஓ வாதலுமாம்.

(இ-ள்.) ஆதியிற் காட்டிய நால்வகை விகாரங்களுட் டிரட்டெனும் விகாரமா மாறுணர்த்துதும். திரட்டெனினுஞ் சங்கீர்தமெனினுமொக்கும். ஆகையி லிருபத மொருபதமாக ஒரோ விடத்து நிலைப்பதவீற் றெழுத்தும் வரும்பத முதலெழுத்தும் ஒன்ருகத் திரண்டு விகற்பமாகும். இது வடமொழிகளின்கண் மிகவழங்கு மென்றுணர்க. ஆகையின் முந்தி நிலைப்பத வீற்றுயிர்கெடும். அதுவே கெட்டதன் மெய்ம்மேல் வரும்பதமுதலுயிரேறும். இவ்வாறு வருதல் தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி எனப்படும். அவை வருமாறு. அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் அவ்விரண்டி லொன்று வந்தால் ஆகாரமும், இகர ஈகாரங்களில் ஒன்றன்முன் அவ்விரண்டில் ஒன்று வந்தால் ஈகாரமும், உகர ஊகாரங்களில் ஒன்றன்முன் அவ்விரண்டி லொன்று வந்தால் ஊகாரமும், முறையே நிலைப்பத வீறும் வரும்பதமுதலும் கெடத் தோன்றுதல் தீர்க்க சந்தியாகும். (உ-ம்.) வேத+ஆகமம்=வேதாகமம், குள+ஆம்பல்=குளாம்பல், பஞ்ச+அங்கம்=பஞ்சாங்கம், சிவ+ஆலயம்=சிவாலயம், சரண+அரவிந்தம்=சரணாரவிந்தம், சேநா+அதிபதி=சேநாதிபதி, பாத+அரவிந்தம்=பாதாரவிந்தம், அக+அரி=அகாரி, மர+அடி=மராடி, சசி+இந்திரம்=சசீந்திரம், கிரி+ஈசன்=கிரீசன், மகீ+இந்திரன்=மகீந்திரன், மகீ+ஈசன்=மகீசன், குரு+உதயம்=குரூதயம், தரு+ஊனம்=தரூனம், சுயம்பூ+உபதேசம்=சுயம்பூபதேசம், சுயம்பூ+ஊர்ச்சிதம்=சுயம்பூர்ச்சிதம், எ-ம். வரும். அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் இகர ஈகாரங்களில் ஒன்று வந்தால் ஏகாரமும், அவ்விரண்டில் ஒன்றன்முன் உகர ஊகாரங்களில் ஒன்று வந்தால் ஓகாரமு முறையே நிலைப்பத வீறும் வரும்பதமுதலுங் கெடத் தோன்றுதல் குணசந்தியாகும். (உ-ம்.) சுர+இந்திரன்=சுரேந்திரன், நர+இந்திரன்=நரேந்திரன், தரா+இந்தி

கையும், துணிவும், என விவ்வைந்தும் பொது வழியாகும். இவற்றை யினித் தனித்தனி விளக்குதும். (௧)

**148.** தெய்வ வணக்கமுஞ் செய்பொருட் டொகையுஞ்
செப்புவ தாகுஞ் சிறப்புப் பாயிரம்.

(இ-ள்.) கிறுத்த முறையானே பதிகமா மாறுணர்த்துதும். பதிகம், பாயிரம், நூன்முகம், முகவுரை, புறவுரை, புனைந்துரை, அணிந்துரை, தந்துரை, இவையொரு பொருட்கிளவி; வழக்குமுதன் மூன்றன் முகத்துப்பதிகமே நூன்முகமாக உரைத்தல் வேண்டும்.—நன்னூல்.—'ஆயிரமுகத்தானகன்றதாயினும், பாயிரமில்லது பனுவலன்றே.' எ-து. மேற்கோள். பலவகைப் பாயிரத்துள்ளே ஈண்டுச் சிறப்புப்பாயிரம் வேண்டுவதெனக் கண்டுணர்க. சிறப்புப்பாயிரம் எத்தன்மைத்தோவெனில், தெய்வவணக்கமாகித்தான் விரித்துரைப்பா னெடுத்த பொருளைத் தொகைப்படக்காட்டல். இவற்றுட்டான் மொழியானும் பொருளானும் வழுவின்றி யுரைப்பவு மற்றையவர் மனவெறுப்பின்றிக் கொள்ளவும் எவர்க்கும் வழுவாப் பயனுண்டாகவுங் கடவுளுதவியே வேண்டினமையாற் றெய்வவணக்கம் வேண்டிய தென்ப தாயிற்று. பலபொருட் டொடர்ந்து தருங்கா லிவ்வணக்க மாதியில் வேண்டுவதன்றி யொவ்வொருவகைப் பொருண்முகத்து வேண்டாதெனக் கண்டுணர்க. எ-று. (௨)

**149.** பாயிரத் துப்பொருள் பகரிற் கேட்பார்க்
கிணக்க மாசை யிசையயவும் பொருட்டெளி
வுரிமை தோன்றவு முரைப்பது நெறியே.

(இ-ள்.) பதிகத்துட் பொருட்டொகைப்படவுரைக்கு மாறுணர்த்துதும். பதிகத்துள் தொகைப்படப் பொருளை யுரைத்துக்காட்டுந் தன்மையாற் கேட்பதற் கிணக்கமு மாசையு மற்றையவரிடத் துண்டாகவும், தன் பொருடெளிவொடு தோன்றவும், பதிகவுரிமை வழுவாதொழுகவு, முரைப்பது முறையெனக் கொள்க. இவற்றுட் கேட்போரிடத்தி லிணக்கமாவதற் கவையடக்கமாகும். கேட்பதற்காசை யாவதற்கெடுத்த பொருளின் மாட்சியு மருமையும் பயனுங்காட்டுவ தாகும். தெளிவுண்டாவதற் கேற்ற பொருளொன்றாகச் சுருங்கச் சொல்லிப் பின்னதனுறுப்பென யதனை யிரண்டுமூன்று பிரிவாகப்பிரிப்பவு மூன்று பிரிவுமிக்கது சிறப்புமன்று. பிற்பட்ட பிரிவிலொன்றாயினு முன்றொகையாகச் சொன்ன பொருளி லடங்கா. பிரிதாய் கிற்றலும்வழுவே. அங்ஙனம் இக்காட்டரசன் கைக்கிணையில் லையென்பது தொகையாயுரைத்த புகழின்றேற்றப் பொருளாம். இனிப் பிரிவாக வவன்கை பொன்மழைவழங்க வின்மையொழிதலும் விண்மழைவழங்க வெம்பகை யொழிதலுமா மென்பது தொகைப்பொரு ளிரண்டாய்ப் பிரித்தவாறு. இவ்வாறன்றி யவனே சொன்மழைவழங்க வறியாமை

யொழியுமென்றுலிது மூத்தொகையா யுரைப்ப வெடுத்த பொருளிலடங்கா மையால் வழுவெனக் கொள்க. பிறவுமன்ன. அன்றியும், பதிகத்துரிமை வேண்டும். இஃதுபொருட்குரிமையும் அளவிற்குரிமையும் எனவிருவகைப் படும். இவற்றுட் பொருட்குரிமையாவது:—தான்விரித்துரைக்க வெடுத்த பொருட்கன்றியே மற்றொரு பொருட்கேலாதாம்படி சிறப்பினை யுடைய பதிகங் கூற லதன்பொருட்குரிமை யெனப்படும். இதனைப்பற்றி முன் னோர் பதிகமே நூன்முக மென்றூர். என்னையோவெனில், அணியுடை முதலிய பலர்க்குப் பொதுமையவாகச் செய்யினும் இருவர்க் கேற்கும் பொதுமுகச் சாயற்காண்ப தரிது. அளவிற்குரிமையாவது :—எலியுடற்கி யானைத் தலையும் யானையுடற் கெலித்தலையு மேலாதனபோற் பொருளை விரித்தவளவிற் கதன்முகமாகிய பதிகவளவுந் தருவதாத லளவிற்குரிமை யெனப்படும். ஆயினும் பதிகவுறுப்பின் மிக்க நெடுமையிற் குறுமை நன் றெனக் கொள்க. இதற்கெலா முதாரணமாம்படி திருவள்ளுவநாயனார் பயனென் றெடுத்துத் தேற்றப் பொருள்வகைக் கியற்றமிழாய் விரித்து ரைப்பப்பதிகமாவது வேதநூன்முத லெவ்வகைநூலுங் கல்லாதுணரவுஞ் சொல்லாதுணர்த்தவும் வல்லவராகி, மெய்ஞ்ஞானத் திருக்கடலாகியவொ ருமெய்க்கடவு டன்றிருவடிமலரே தலைக்கணி யெனக் கொண்டேத்தி, யிரு ளிராவிடத்து விளங்கிய வொருமீன் போலவும் பாலைச்சுரத்தரி தலர்ந்த பதுமம்போலவு மெய்யாஞ்சுருதி விளக்காதிருளே மொய்த்த நாட்டின் கண்ணுங் கடவு ளேற்றிய ஞானத்திருவிளக் கெறிப்பத் தெளிந் துணர்ந் தெங்குமொரு விளக்கென நின்றுயர்ந்த திருவள்ளுவருரைத்த பலவற் றொன்றை நான்றெரிந்துரைப்பத் துணிந்தேன். அந்நாயனார் தந்த பயனெ னும் பெருங்கடலாழத்தின் மூழ்கி யாங்குடையரு மணியொருங் கெடுத் தொரு சிறு செப்பினடைத்தாற் போலத் திருவள்ளுவரது பயனெலாம் விரித்துப் பகரும்படி நான்வல்ல னல்லேனாகையி னக்கடற்றுறை சேர்ந் தொருமணி யெடுத்துக் காட்டவுணர்ந்தேன். அவர் சொன்ன குறளி னொன்றே யிங்ஙன நான் விரித்துரைப்பத் துணிந்தேன். அஃதாவது:—"ம னத்துக்கண் மாசிலனாத லனைத்தற னாகுல நீரபிற." எ-து. இல்லறந் துற வறமென்றிவ் விரண்டனுள்ளு மடங்கி நிற்கு மெல்லா வறங்களு மனத் தின் றூய்மையாற் பெறும் பெருமையே தருமமெனவும், மனத்தினுண் மாசுகொண்டவன் செய்யுந்தவமுந்தானமு மற்றையாவு மறத்தினரவமாவ தன்றி யறத்தின்பயனுள வல்லவெனவு, மக்குறளிருபய னிவையென வி ரித்துக் காட்டுதும். விரிப்பவே மெய்யும் பொய்யும் விளக்கி யுட்பயன்றரு மெய்யறத்தின் றன்மையே வெளியா யிஃதொன் றுணர்ந்து நாமதற்கொப்ப நடந்தாலிது வீடெய்தும் வழியெனக் காணப்படும். பெரும்பொருணேர்ந்து பொய்ம்மணி கொள்வது கேடென்றாயினும் பொருளைநேர்ந்து முடலை வா ட்டியு முயிரை வருத்தியு மேற்கதிவீட்டிற் செல்லாச் சில பொய்யறங்களை யீட்டுவதிலுங் கேடாமன்றே. இதனை விலகித் தன்னுயிராக்கங் காப்பது

வேண்டியிக்குறட்பயனுராயவது நன்றேயெனவிப்பதிகத்துரிய தெய்வவண க்கமுஞ்சொல்லக் குறித்தபொருளைத் தொகையாயுரைத்தலுந் தெளிவாயிரு பிரிவாக வகுத்தலுங் கேட்பதற்கிணக்க மாவதற் கவையடக்கமு மாசையா வதற் கப்பொருண்மாட்சியு மருமையும் பயனு முறையே வந்தவாறுகாண்க. இசைத்தமிழ்ப் பதிகத் துதாரணமாகக் கம்பருரைத்த பதிகமுப்பாயிர த்தைக்காண்க. அவற்றுண் முதற்பாத் தெய்வவணக்கமும்,பின்னிருபாவுஞ் செய்பொருளுணர்த்தலும், பின்னுற்பாவினோ டவையடக்கமு, மற்றவை தன்கதை மாட்சியு மருமையும் பயனும் வந்ததறிக. எ-று. (௩)



## இரண்டாவது:—காரணம்.

## 2. Cause.

**150.** காரண வழியெனக் காட்டுரைப் பொருட்குறி
யகத்திணை புறத்திணை யாமிரு வகைத்தே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே காரணவழியா மாறுணர்த்துதும். ஈண் டுக்காரண மென்னுஞ் சொல்லாலுரைப் பாவெடுத்த பொருளைக்காட்டற்கு தவு நியாயங்களே வருவன வெனவு மந்நியாயங்கடோன்று மிடனேதிணை யெனவுங்கொள்க. இவையே யகத்திணை யென்றும் புறத்திணை யென்றும் இருவகைப்படும். இவற்றையினித் தனித்தனி விளக்குதும். எ-று. (க)

**151.** அகத்திணை யியல்பே யறைபடும் வகையே
பொதுச்சிறப் புவமை புறநிலை யெதிர்நிலை
கருவி காரியங் காரக முன்னவை
பின்னவை யெனவாம் பிரிவீ ராறே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே யகத்திணையாமாறுணர்த்துதும். அவை யே யியல்புமுதலாகப்பின்னவையீறாகப் பன்னிரண்டெனப்படும்.எ-று.(உ)

**152.** அவற்றுள்,
இயல்புரைத் தொப்ப வியம்புத லியல்பே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே யியல்பெனு முதலகத்திணையாமாறுண ர்த்துதும். ஆகையிலவ்வவ் வியல்பினைக்கொண்டு பொருளைக்காட்ட வியல் பகத்திணை யெனப்படும். அங்ஙன நல்லறிவில்லா ரீனரொன்றுகாட்ட வுண வுமுடையு மைம்புலநுகர்ச்சியு மற்றவுயிர்க்கும் பொதுமையவாகி நல்லறி வொன்றே மாந்தரியல்பின் சிறப்பென்றமையா லறிவில்லாதார் மக்களென ப்படா விலங்கினோ டிணையரெனப் படுவரென்ப தியல்பெனு மகத்திணையா கும்,—சிந்தாமணி.—"பெண்ணெனப்படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக் கா, வுண்ணிறை யுடைய வல்ல வோராயிர மனத்த வாகு, மெண்ணிப் பதங்

தை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க் குன்றெரி யுற்றாற் போன்மெலிந்து பினிற்கு மன்றே." என்றுராகையின் மாதரதியல் பினைக் காட்டி மாதனை நம்பலாகா தென்பது காட்டினதாயிற்று. எ-று. (௩)

**153.** தொகைவிரித் துரைத்தல் சொற்பொருள் வகையே.

(இ-ள்.) வகையகத்திணையா மாறுணர்த்துதும். தொகையா யுரைத்த பொருளை வகையறுத்தியம்புதல் வகையகத்திணையாம். (உ-ம்.) வந்திளவேனி லுலாவிய வனமெலா மகிழ்ந்ததெனத் தொகைப் பொருளா யுரைத்ததை வகையறுத் துரைப்பம். "விரைவாய் நாகம் விருப்புறீ நகைப்பன, முகைவாய்த் தாழை முறுவிக் கமழ்வன, நறைவாய்ப் பன்மலர் நயனம் விழிப்பன, மதுவாய் வண்டின மகிழ்ந்தியா ழொலிப்பன, திங்குரற் குயிலினஞ் சென்றுபா விசைப்பன, வேனைப் பறவை யினப்பறை துவைப்பன, வெறிவாய் விரியிளை வேனில், செறிவாய் வனத்துட் செருக்கி யுலாவவே." எ-து. வகையகத் திணையாம். அங்ஙனம் வனத்திற் கிராமர் போகையி லயோத்திமாநக ரெல்லாம் வருந்தின தென்பது வகையறுத் துரைப்ப மனிதர் புலம்பலுரைத்ததின் பின்னர்க்கம்பர் சொன்னதாவது :—" கொடியடங்கின மனைக்குன்றங் கோமுர, சிடியடங்கின முழக்கிழந்த பல்லியம், படியடங்கலு நிமிர்பசுங்கண் மாரியாற், பொடியடங்கின மதிற்புறத்து வீதியே. அட்டிலு மிழந்தனபுகை யகிற்புகை, நெட்டிலு மிழந்தனநிறைந்த பால்கிளி, வட்டிலு மிழந்தன மகளிர் கான்மணித், தொட்டிலு மிழந்தன மகவுஞ் சோரவே. ஒளிதுறந்தன முகமுயிர் துறந்தெனத், துளிதுறந்தன முகிற்றொகையுந் தூயநீர்த், தளிதுறந்தன பரிதான யானையுங், களிதுறந்தன மலர்க் கள்ளுண் வண்டினே." பலவுமிராமாயண நகர்நீங்குபடலத் திருநூற்றிரண்டாம்பாவே தொடங்கிக்காண்க. எ-று. (௪)

**154.** பொதுவெனப் பலவை யடக்கு மொன்றே
சிறப்பென வொன்றி னடங்கும் பலவே.

(இ-ள்.) பொது வகத்திணையுஞ் சிறப்பகத்திணையு மாமாறுணர்த்துதும். ஆகையிற்றனக் குறுப்பெனப் பலவற்றை யடக்கிக் கொள்வது பொதுவெனவு மொன்றினடங்கின பலவற்றுட் டனித்தனி யொவ்வொன்று சிறப்பெனவுங்கொள்க. இவ்வா றருடமை தானம் பொறை தவ மூக்கமுதலியவெல்லாம் பொதுப்படவறமே யாகையில்றம் பொதுவெனவுமற்றவைத் தனித்தனிச் சிறப்பெனவும்படும். பிறவுமன்ன. ஆகையிற் றயையைப்புகழுப் பொதுப்பட வறத்தின் மாட்சியைக் காட்டிப் புகழ்வது பொதுவகத்திணையாம். கல்விபுகழ்ந்துழி திருவள்ளுவர் முதலியகற்றோர் மாட்சியைப் புகழ்வது சிறப்பகத்திணையாம். பிறவுமன்ன. (உ-ம்.)—சிந்தாமணி.—"தேவரோ தாமுமாகித் தேவராற் றொழிக்கப் பட்டு, மேவல்செய் திறைஞ்சிக் கேட்டு மணிதமர் பணிகள் செய்து, நோவது பெரிதுந் துன்ப நோயினுட் பிறத்

தறுன்பம், யாவதுந் துன்பமன்று யாக்கை கொண்டவர்கட் கென்றான்.'' இதனுளாதிக் கடவுளன்றி மற்றைத் தேவர்படுந்துன்பங்களைச் சொன்னபின்னத்தேவரு முடலுடையாராகி யடையுந் துன்பங்காட்டப் பொதுப்பட்டவுடலைக் கொண்டயாவர்க்கு மெல்லாந் துன்பந்தானே யென்றுமுடித்தானாகையிற் பொதுவகத்திணை யாயிற்று. மீளவுங் காம மயக்கத்தைக் காட்டப் பொதுப்படக் காதன்மிகுதியால்வரு மதிமயக்கங்காட்டி காதன் மிக்குழிகற்றனவுங் கைகொடாவாதல் கண்ணகத் தஞ்சனம்போலுமால், என்பது சிந்தாமணி. இதுவும் பொது வகத்திணையாம். எ-று. (௫)

## 155. உவமை யெனப்பிறி தொப்ப வுரைத்தலே.

(இ-ள்.) உவமையகத்திணையா மாறுணர்த்துதும். தானேயுரைப்பானெடுத்த பொருளை விளக்கவு மற்றவ ரவற்றை யொப்பித்துக் கொள்ளவும் பிறிதொன்றனை யெடுத்திரண்டிற் கொப்புமை காட்டித் தன்பொருடோன்ற விளக்கியுரைப்ப துவமையகத்திணை யெனப்படு மாகையில் விளக்குவமையென்று மொப்பித்துக்காட்டுவமையென்று மிவை யிருவகைப்படும். இவற்று ளத்தாட்சியு மடங்குமென்றுணர்க. (உ-ம்.) குறள்.—" சலத்தாற் பொருள்செய்தே மாத்தல் பசுமட், கலத்துணீர் பெய்திரீஇயற்று.'' எ-து. விளக்குவமை. "வாளோடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலோடென், னுண்ணவை யஞ்சுபவர்க்கு.'' எ-து. ஒப்பித்துக்காட்டுவமை.—சிந்தாமணி.—காமத்தாற் கேடுவருமெனச் சச்சந்தற்கு மந்திரி காட்டிச் சொன்னதாவது:—"காமமே கன்றி நின்ற கழுதை கண்டரு ளினாலே, வாமனார் சென்று கூடிவருந்திநீ ரொன்னும் வையத், திமஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே, நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியி னென்றான்.'' அன்றியுங் கணவனை யிழந்ததற் குள்ளந் தேற வுலகினிலைத்த செல்வமில்லையென் றத்தாட்சியாகவும் பொதுப் பொருளாகவும் காட்டினபடியாவது.—சிந்தாமணி.—"மன்னுநீர் மொக்கு ளொக்கு மானிட ரிளமை யின்ப, மின்னினொத் திறக்குஞ் செல்வம் வெயிலுறு பனியி னீங்கு, மின்னிசை யிரங்கு நல்யாழினியினு மினிய சொல்லா, யன்ன தால்வினை யினாக்க மழுங்குப தென்னை யென்றான்'' இதனுட்பொருட்குப் பொருள்விளக்குவமைகொண்டு தன்பொருளத்தாட்சியா லொப்பித்த வுவமையுரைத்தவாறு காண்க. ஈண்டினி யணியதிகாரத்துவமையு முவமைவிகற்பங்களும் விரித்துரைப்பாம். எ-று. (௬)

## 156. புறநிலை யொப்பிழி வாக்கமென மூன்றே.

(இ-து.) புறநிலை யகத்திணையா மாறுணர்த்துதும். தான் குறித்தவற்றிற் புறத்து மற்றொரு பொருளை யெடுத்துக் காட்டிக் குறித்த தன் பொருளை விளக்குதல், புறநிலையகத் திணையெனப்படும். இதுவே ஒப்பு மிழிவு மாக்கமுமென மூவகைத்தெனக் கொள்க. இவற்றுட் புறத்தெடுத்த பொருட்குத் தன் பொருளொத்ததெனி லொப்பு; குறைந்ததெனி லிழிவு; மிக்கதெனி

லாக்கமெனப்படும். (உ-ம்.) "பிறர் கடுஞ்சொலின்று னிந்நாள் பொறுத்தது கண்டு நீயும் பொருயோ." என்பதொப்புப் புறநிலை. 'அடிப்பானை பொறுத்த ன னொருசொல்லா விடிப்பானை பொருர்கொல்லோ.' என்பதிழிவுபுறநிலை. 'நக்களவர் நயன்கொண்ட நாட்டுநலநாடியபின், மக்களவர் மேனலங் கொள்வானுலக நாடாமோ.' என்பதாக்கப் புறநிலை. பிறவுமன்ன. எ-று. (எ)

**157.** குறித்தவை காட்ட மறுத்தவை காட்டி
யெதிரில் விளக்க லெதிர்நிலை யென்ப.

(இ-ள்.) எதிர்நிலை யகத்திணையா மாறுணர்த்துதும். ஒன்றனை விளக்க வதனை மறுத் தெதிரே நிற்கும் பொருளைக்காட்ட லெதிர்நிலை யகத்திணை யெனப்படும். அங்ஙன நல்லோரது மேன்மை தோன்றத் தீயோரதினைத் தைக் காட்டலுங் கல்லாமையால் வருமிகழ்ச்சி தோன்றக் கல்விப் பயக் கும் புகழ்ச்சிகாட்டலு மெதிர்நிலை யகத்திணையாம். (உ-ம்.) தேம்பாவணி. "கான்சுரக்கு மிளமுல்லைநட்டுப் பொன்னுற் கடைகோலி, வான்சுரக்கும் பனிமாலைப் பந்தர் முத்த மணற்பாய்த்தித், தேன்சுரக்கு நீரூட்டி வளர்த்த பூங்காத் தீய்ந்தறவோ, மீன்சுரக்கு மிராவொளித்துப் போதிர் நம்மைவி ட்டென்பார்." இதனு ளொட்டெனு மலங்கார வகையாற் சூசைமாமு னி யெகித்து நாட்டி னீங்கலின்வந்த கேடுதோன்ற வன்னுனுங் கிருந்துண ர்த்தியதனுல் வந்த நன்மை காட்டியவாறு காண்க.—இருமொழிமாலை.— "கார்முகத்து முல்லை கதிர் முகத்துத் தாமரையே, சீர்முகத்துஞ் சிந்தாப் பொறையினிதே—போர்முகத்து, வில்லெதிரோ தோல்வையினு மிக்கின்று மெல்லியலார், சொல்லெதிரோ தோலாநிலை." இதனின் மகளிரோ டெதிர்த் திகலி நின்று ரிகழ்ச்சி தோன்றப் போர்முகத்து நில்லா தோடின சேவகனி கழ்ச்சி காட்டப்பட்டது. எ-று. (அ)

**158.** காரண நான்குங் காரிய நான்கும்
விரித்துத் தன்பொருள் விளக்க லுரித்தே.

(இ-ள்.) கருவியகத்திணையுங் காரியவகத்திணையுமாமாறுணர்த்துதும். கருவியெனினுங் காரணமெனினு மொக்கு மாகையினென்றற்குள்ள காரணத்தைக்கொண்டாயினு மதனுலாகுங் காரியத்தைக் கொண்டாயினு மதனைவிளக்கிக்கூறல் கருவியகத்திணையுங் காரியவகத்திணையுமாமெனக்கொள்க. இவற்று ளாக்கினு னென்னுங்கருத்தாக் காரணமு முதற்காரணமுந் துணைக்காரணமுங் குறிப்புக்காரணமுமாகக் காரணவகை நான்கென்ப. அங்ஙனங் கடவுளுனாத்த நூலிஃதாகையிற் பொய்யும் பிழையுமில்லதே என்பது ஆக்கினுனெனுங் காரணவகத்திணை; மண்ணுலாய வுடலிஃதா கையி னிற்பதரிதே - இது முதற்காரண வகத்திணை ; ஐம்பொறி யுணர்ந் துந் தன்மை யறிவுளோர் நம்பா ரொன்றுன் - இது துணைக்காரண வகத்தி ணை; பேருலகாள யான்பிறந்ததாயபின், பாருலகிழி நலம்பற்றிநக்கவோ -

இது குறிப்புக்காரண வகத்திணை; இக்கால்வகைக் காரணங்களால் வருங் காரியங்களைக் கொண்டிவ்வாறு தத்தங் காரணப் பொருட்களை விளக்கி யுரைப்பது காரியவகத்திணையாம்.—குறள்.—"நோயெல்லா நோய்செய்தார் மேலவாநோய் செய்யார், நோயின்மை வேண்டு பவர்." பிறர்க்கு நோய் செய்தற் காரணமாகத் தனக்கு நோய் காரியமாக விளையு மென்றமையாற் பிறர்க்கு நோய் செய்வ தின்றெனக் காட்டின காரியவகத்திணை யாயிற்று. பிறவுமன்ன. எ-று. (௯)

**159.** காரக மென்ப கருத்தா கருமங்
கருவி கருத்திடங் காலந் திறனேழே.

(இ-ள்.) காரகவகத்திணையாமாறுணர்த்துதும். ஒன்றனைச் செய்தலிற் கூடியபலவும் பொதுப்பெயராகக் காரகமெனப்படும். அவையே செய்பவனுஞ் செய்தொழிலு மதற்குதவு மிருவகைக் கருவிகளு மதனாற்கருதிய பயனு மதனைமுடித்தவிடமுங் காலமும் படியுமெனக் காரக மெழுவகைப் படும். ஆகையிலொன்றனைவிளக்க விவற்றைவிரித்துக் காட்டில் காரகவகத்திணையா மெனக்கொள்க. இவற்றுளெல்லா நடப்பினுஞ் சிலவொழித்துச் சில நடப்பினுமாம். (உ-ம்.) தேம்பாவணி.—"தண்டவத் தனைய பைம்பூந் தருத்திர ணிழற்றிக் கவ்வு, மண்டபத் தொருநாள் வைகி மதுநலம் பொழிவாய்க் கஞ்சம்,விண்டவத் தொழியு மாந்தர் வீடுறச் செப்பங் காட்டி,யொண்டவத் திறைவன் சூசை யுரைவிரி தமிழிற் சொன்னான்." இதிலே யொண்டவத்திறைவன் சூசையென்பது கருத்தா; செப்பங்காட்டிச் சொன்னானென்பது கருமம்; மதுநலம் பொழிவாய்க் கஞ்சம்விண்டென்பது கருவி; அவத்தொழியு மாந்தர் வீடுறவென்பது கருத்து; தண்டவ மண்டபத்தென்பதிடம்; ஒரு நாளென்பது காலம்; உரைவிரி தமிழி லென்பது திறன்; என வேழும் வந்தவாறு காண்க. ஈண்டுச் சுருங்கச் சொன்னதை விரித்துரைப்பவு மியல்பே. எ-று. (௧௦)

**160.** முன்னவை பின்னவை முன்பின் னடந்தன
பன்னித் தன்பொருள் பயன்படப் பகர்தலே.

(இ-ள்.) முன்னவையகத்திணையும் பின்னவையகத்திணையுமா மாறுணர்த்துதும். எடுத்தபொருளே தோன்றவதற்கு முன்னாயதும் பின்னாவதும் விரித்துக்காட்டல் முன்னவை பின்னவையென விருவகை யகத்திணையாம். (உ-ம்.) விருத்தம்.—"காலைவாய் மலர்க்கமலங் காய்ந்திதட் கதவடைப்பச், சோலைவாய்ப் பறைதுவைத்த புள்களிப்ப வெங்கதிரோன், வேலைவாயுறமேவிய கறவைகள் கனையா, மாலைவா யிருள்வடி வொடுகட்குல் வந்ததுவே." புறநிலை. இதிலே யிராவைவிளக்குவதற்கு முன்வரும் பலவற்றை விரித்துரைத்தமையான் முன்னவை யகத்திணை யாயிற்று.—குறள்—"பகைபாவ மச்சம் பழியென நான்கு, மிகவாவா மில்லிறப்பான் கண்." இதி

லே பிறயனை விரும்பலாகா தென்பது காட்ட விரும்பினபின்னர், வரும் பகைபாவ மச்சம்பழியென நாற்கேடுகளைக் காட்டினவதனாற் பின்னவை யகத்திணையாயிற்று.—தேம்பாவணி.—"தொல்வினை யினிய வென்று துக ளுறத் தோன்றுங் காலு, நல்வினை யரிய வென்று நடங்கெடத் தொன்றுங் காலுங், கொல்வினை நிரையச் செந்தீக் குளிப்பநல் லுணர்விற் ருழ்ந்து, வ ல்வினை யூக்கம் பூண்டு மருளலென் னெஞ்சே யென்ருன்." இதிலே யரு மைக்கஞ்சி நல்வினைவிடாமலு மினிமைவிரும்பித் தீவினை செய்யாமலு மு றுதிபெறும்படித் தீவினை பின்வரு நரகப் பிடைகளுணர்வது நன்றென்ற மையா லிதுவும் பின்னவை யகத்திணை யாயிற்று. இவ்வகத்திணையை 199-ம் சூத்திரத்தில் விரித்துக் கூறுதும். (கக)

**161.** புறத்திணை யொழுக்கநூல் புறக்கரி மூன்றே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே புறத்திணையாமாறுணர்த்துதும். அவை யே ஒழுக்கமு நூலுங் கரியுமென மூவகைப்படும். இவற்றுளவ்வவநாட்டி னிறைவழுவின்றி யொழுகுமுறையே ஒழுக்க மெனப்படும். இவ்வகைமு றையோடு தன்பொருளொத்ததாகக் காட்ட லொழுக்கப்புறத் திணையாம். (உ-ம்.) குறள்.—"எவ்வ துறைவ துலக முலகத்தோ, டவ்வ துறைவ தறிவு." என்ருராகையி னுலகுள வழுவற்றமுறையோ டொத்ததிதுவெனக் காட்டி னுலகங்கொள்ளத் தகுவதென்பது விளங்கும். அன்றியும், வேதநூல் நீதி நூல் மனுநூல் முதலிய நூல்வழி விலக்கினவும் விதித்தனவு மெடுத்துக் காட்டித் தன்பொருடோன்ற விளக்கல் நூற்புறத்திணையாம். மறுப்பாரின் றிவழங்கு நூலினிடத்துத் தானெடுத்துரைத்த பொருளே யுளவெனக்கா ட்டினெவருமையமின்றி யொப்பித்துக் கொள்வதெளிதே. அன்றியுங் கரி யெனினுஞ் சாட்சியெனினுமொக்கும். ஆகையின்மிக் கறிவுடையோருரை த்ததாயினு மெழுதினதாயினுந் தானெடுத்தபொருட்குச் சாட்சியாகக்கொ ண்டு காட்டல் கரிப்புறத்திணையாம். ஆகையிலிலக்கிய வுதாரணங்களை யெடுத்துக்காட்ட லிப்புறத்திணையாமெனக் கொள்க. இப்புறத்திணையை 199-ம் சூத்திரத்தில் மேற்கோளாக விரித்துக்கூறுதும். எ-று. (கஉ)

## மூன்ருவது:—விரிவு.

## 3. Detail.

**162.** விரிவென வணிவழி விரித்த தன்பொரு
டெரியவைக் கட்செலச் செப்புத லென்ப.

(இ-ள்.) நிறுத்தமுறையானே விரிவாமாறுணர்த்துதும். விரிவெனி னும் பரவெனினுமொக்கு மாகையின் மேற்கூறிய திணைமூவைந்து மெல் லாப்பொருட்கெல்லாம் வேண்டியவல்லவாகி யொருபொருட்குரிய சில

வுஞ் சில மற்றொரு பொருட்குரியவாகையிற் றான்விரித்துரைப்பவெடுத்த
பொருட் கேற்பவற்றைத் தெரிந்து போர்முகத்தணிகளைப் பலவகைவியூகமா
கவகுத்ததுபோலக் குறித்தபயனையடைதற்கேற்ற வொழுங்குந் தெளிவு
மாம்படித் தெரிந்தநியாயங்களைப் பகுத்தபின்னரேற்றிய சுவர்மேற்சித்திர
மெழுதுவார்போலவு மெழுதிச்சுருட்டின படத்தைவிரிப்பார்போலவு மு
றையிற்கிடந்த நெடும்வாளுருவி வீசுவார்போலவுந் தானுமவற்றைத் தனி
த்தனி விரித்துக்காட்டல்வேண்டும். இதுவேவிரிவெனப்படும். இதற்கைந்
தாமதிகாரத்திற் சொல்லப்படு மலங்காரங்களே வழியாம். உதாரணங்கா
ட்ட விதியே விளங்கும். ஆகையிற் பதிகத்துதாரணமாக வெடுத்த குற
ளுண் முதற்பயனாகிய மனத்தின் றூய்மையா லறமெலாம் பெறும் பெரு
மையு முடையன வென்பது பல வகத்திணையால் விரித்து விளக்கியவாறு.
அறமென்னப்பட்ட யாவுமன் னுயிர்க்கோ ருயிராகவு மனத்திற் கோரணி
யாகவு நெஞ்சத்திற் கொரு செல்வமாகவும் வழங்குமியல்பினை யுடைய
ன வாகையிற் புறத்துத் தோன்றும் வேற்றுருக் கோலங் காட்டி. யகத்து
ண்ணுழையாவறமோ வறத்தின்பேறும் பெருமையுமுடைய வென்பர்.
எப்பொருளினு மதனுண்மை யுணர்தலே ஞானம். உணர்ந்த பொருளினி
லவையே நல்லவை யெனவு மிவையே யல்லவை யெனவுந் தெளிதலே
காட்சி. தெளிந்தவழியேயல்லவை யொருவிநல்லவை மருவியொழுகலே
யொழுக்கம். இந்நல்லொழுக்கமே யனைத்தறனாகையி லிவையெலா மன
முயற்சியா லாகவேண்டுழி, மனமொவ்வா வறனெல்லாம் பொய்யென விக
ழப்படுவது முறையே யென்பது. இவையுமித் தொடக்கத்தனபலவு மியல்
பகத்திணையாம். அன்றியும் பிறர்நோய்கண் டகத்திரங்கா னையோவென
வாய்பொய்த்த விரக்கங்காட்டல் தயையோ. நெஞ்சங்கடுத்த சுடும்பகை
கொண்டான் முகநகநட்பதுநட்போ. ஒன்றீந்தொருபத்தடித்துக் கொள்
ளத்துணிந்தான் பிறர்க்கீந்துதவுதல் கொடையோ. மனைநகர்நாடுமகல நீக்
இயுட்பொருளின்ப மனுகுமாசைநீங்கான் மறுதுணையில்லா வனம்புக்கு
றைதல் துறவோ. பிணியுறப் பசிமிகப் பகைப்பட மொய்த்ததுன்பமின்ப
மென வுணர்ந் தகங்கலங்காதான் புறத்தும் புலம்பாதிருப்பது பொறையே.
பிறரழகாசை மனம்புகாத் தன்னிறைகாத்த மகளிர்புறத்துக் காட்டுமொடுக்
கமுங்கற்பே. தன்மனக்கோட்டங்கண்டு நாணுதல் நாணமே. மனத்திலி
றைஞ்சிப் பிறனைப் பணிவான் புறத்துப் பொய்யாச்சொல்லின் வணக்க
மும் பணிவே. உளத்திற்கலங்கா தெதிர்வெம்போர் முகத்தஞ்சான்றுணி
வாய சேவகந்தானும் வீரமே. இவ்வாறனைத் தறன்மனத்துக் கண்மாசில
னுதலாகுமன்றே என்பதிவையு மித்தொடக்கத்தனபலவும் வகையகத்தி
ணையாம். அன்றியும் உள்ளொவ்வாமற் புறத்துத்தோன்றுஞ் சித்திரவற
த்தின்சாயலும் பயன்றருநல்லறமெனப்படுமாயின், நான்கொண்டாட்டிய
புன்மரப்பாவையுங் களிகொண்டாடிய கருங்கட்பாவையும் வேறுபாடின்றி
யொக்குமெனவும், கண்ணே கனியவழகு காட்டியுள் ளுயிர்கொல்லு நஞ்சு

டைக்காஞ்சிரப்பழனும், புறத்துவீசு மணமேயொப்பவகத்துமினிய தேறல் கொண்டமாங்கனி தானு மொன்றெனவும், ஒளி பெற வெழுதிய வோவி யப்படமுமுயிர்பெற்றிமிழ் வாழுடலு மொன்றெனவுமிவை வேறல்லவெ ன்புழியன்றோ மனமுள் ளொவ்வா வலைந்தேன் முகத்தெழும் பொய்ய றச்சாயலு நெஞ்சில் வீற்றிருந்தினிதிற் புறத்துத்தோன்று மெய்யறமாட் சியுமொன்றெனச் சொல்லவும்படுமே. பசியபொற் றூணிலைத்து நாட்டி, நெற்றியிற் பவளபோதிகை யேற்றுபு, வயிரநன்மணி யுத்திரம் பாய்த்திப் பளிக்குச்சுவர்மேன் முகிலகடுரிஞ்சுயர் சிகரமொளியின் மணியாற்கூட்டி, வாணிகர்மாளிகை யருந்தொழிற்றச்சர் வழுவறமுடிப்பினு முள்ளாளரசன் கொடுங்கோலோச்சுங் குரூரனாயி னுலகிலாயவொரு பயனுண்டோ. அவ் வாறொருவனருமறையோதினும்,அரும்பொருட்கலை நூலளவறக்கற்கினும், பலநதியாடினும், பலதலஞ்சேரினும், வரைவில் கொடுப்பினும், வழுவில்ந டப்பினும், கோயின்மண்டபங் குளமுதற்பற்பல வாயிற்றருமமெனவுவந்தி யற்றினும், திரட்பொருளீட்டிய செல்வந்துறப்பினும், மனைநகர்நாடு மகார் மனைசுற்றமுந்துறந்தரும்வனத்திடை துணையறவுறையினும்,இன்புறுசுவை சுகமெல்லாமறுத்தே ஐம்பொறிகொன்றுடலழியநோற்பினும், ஈரறவழி யெலாநேரச்செல்லினும், மனத்தூடிய வினைமாசுளனாயிற்றனக்கொருபய னுந் தகாதெனவுணர்க. ஒளிபெறப்பசும்பொன்புறத்துப் பூசி யுளுப்பாந்தழி மரப்பாவையாகவும், அழகிடத்தீட்டிய கோலங்காட்டித் தீண்டாவங்கப்பா னையாகவும், வெருவிடக்கொடும்புலி நெடுந்தோற்போர்த்துப் பசும்புன் மே யிழிவுறுங்கோவாகவும், நன்மனத்தூய்மை நண்ணுவறனெலா முட்பயன் கண்டவ் வளவிலனைத்தையு மெண்ணுமிறைவன் முகத்துத் தோன்றுமே. என்பதிவையு மித்தொடக்கத்தனபலவு முவமையகத்திணையா யெதிர்நி லையும் வகையுஞ்சிறப்புங் கலந்துவந்தவாறுகாண்க. அன்றியு மிவற்றிற் கெல்லாங் காரணமியாதெனி னுயிரு முடலுமென விரண்டொன்றாய்ச் சேர்ந்தபொருளே மனிதனாகையி லவற்றுளுயிரளவின்றி மிக்கதாயுயிர் சேரறமு மிக்கவெனப்படும். உடற்கொண்டறத்திற்குரிய செயினுமவைய றமல்ல, வறவுடலாயவற்றுள்ளமுங் கூடினுயிருளவறமாம். நிறநன்றாயினுங் காஞ்சிரநன்றோ. மீளவு முலகிருளகலச் செங்கதிர்பரப்பிய பருதியேபோல மனவிருளிரியத் திருவொளிக் கதிரென வேத நூலுரைத்துத் தந்தவிறை யோன் விலக்கினநீக்கலும் விதித்தனவாக்கலு மெய்யறமாகையிலவற்கோ ரிருளில தெளிவிற்றோன்று மனத்துட்டூயவையுளவெனிற் புறத்துக்காட் டிய நல்வினை யறமெனப்படுவதோ. இறைவற்கேற்பன செயலேயறமெ னின் மனத்தழுக்காறவற் கேலாதிருக்க மைந்தர்ப் புகழ்வதியற்றலாலாவ தென்னே. தானேவிதித்த வறநல் வினைக்குத் தானேபயன்றரத் தருவனா கையி னுள்ளுந்தெரிந்த தன்கண்வெறுப்ப வொருவன்கொண்ட மனமா சுளவெனிலினித்தா னவற்கறப்பயனைத்தருவனோ. தோன்றியொழியுமின் னொளிபோல வுட்பயனறியாமாந்தர் வாய்ப்புகழொன்றே மனமாசொவ்

வாப்புறத்தறன் சென்றபயனெனத் தெளிவிற்றேறிப் பொன்றின பின்னி வனல் வரும்புகழாகிற்புழி, தானெரி கிலத்தின் வருந்தி கிந்தைப்படுவேதே நீர்மையன்றெனச் சிந்தையின்மாசிலசீரறம்போற்றுக. என்பதிவையு மித் தொடக்கத்தனபலவுங் கருவிகாரியமென் றீரகத்திணை வந்தவாறுகாண்க. அன்றியும் கயவருந்தாமொரு காயுங்கனியு முயிரறக்கொய்த வொருமரக் குறையு மற்றெப்பொருளும்வந்து கொளுங்கா லுட்குறையின்மை யுணர்ந் துநாடி, கட்கினிதாகிய காஞ்சிரமொருவி முட்புறவுட்சுவை முதிர்கனிநன் றெண நோக்கியும், புறமெனு துள்ளுழிவுற்றன நீக்கியுட்டகையது கொள் வாரன்றே வெஞ்ஞான்றும் வானமேலினிதினழியா மெஞ்ஞானப்பயன் றருமெய்யறமொன்றே யிவ்வாறெண்ணுநிலையே யுட்பயனவ்வவர் தாயி னுமைந்தர் புகழுறப் புறத்துச்சாயல் போதுமென்றறத்திறத்துத் தானு ளுந் தெளியாதென்னோ. என்பதிவையு மித்தொடக்கத்தன பலவுமாக்கப் புறநிலையகத்திணையாமெனக்கொள்க. அன்றியு "மனவிருளிரியமணிவிளக் காகத், தனியருளிறைவன் றந்தமறைநூ, லாய்ந்துழியீண்டி யானறைந்த யாவும், வாய்ந்தமெய்யென வழங்கித்தோன்றுமே, நும்வாயென்புகழ்நுவ ன்றுபாட, வெம்வாயெரிப் பெலிமேன்மேற்கொன்றிட, வப்புகழ்ப்பெலிய ளையநும்மன, மொப்பிலாதென்னை யொருவிகிற்றலா, லவையெலாம் பொ ய்ப்பொருளாகக் கைக்கொளா, நவையென வெறுத்தனேநானே." யென வும், 'புணர்ந்திடத்தேவபூசையினேர்ச்சி, கொணர்ந்துழிப்பகையுட் கொண் டதென்னுணர்கி, னகன்றப்பகைதீர்ந்தல் லாற்பூசையு, மகன்றுமறுப்பனு னே.' யெனவு, 'மாசிலான்மறையென வறைந்தபின்மனத்துண், மாசிலனு தலே மாண்புறுமனைத்தற, னல்லது தீயவை யகத்தொளித்தினிய, வல்லு ருக்காட்டன் மாணறமென்பவோ.' என்பதிவையுமித் தொடக்கத்தனபலவு நூற்புறத்திணையாம். அன்றியும்,'ஈண்டுப்பிறிதின்வேறொருசாட்சி,வேண்டு மோதனக்கு மெய்தானுளைப்பிற், புறத்தறச்சாயல் புகழப்பிறர்மெய்த், திற த்துளத்தம்மை தீயெனச்சுடச்சுடச், செறிவாய் மருளறத்தெளிந்து மெய் ம்மைகண், டறிவாரறப்பய னுசையுட்பட்டார்.' இதனுலன்றோ, 'வானுயர் தோற்றமெவன் செய்யுந் தன்னெஞ்சந், தானறிகுற்றப்படின்.' என்றாரன் றியும்,—'நீட்டியசடையுமாகி நீர்மூழ்கி நிலத்திற்சேர்ந்து, வாட்டியவுடம் பின் யாங்கள் வரகதிவிளைக்குமென்னிற், காட்டிடைக்காடிபோகிக் கயமூ ழ்கிக்காட்டுணின்றும், வீட்டினை விளைக்கும் வேண்டும் வெளிற்றுளை விடுமி னென்றான்.—நுண்டுகில் வேகலஞ்சி நெருப்பகம் பொதிந்து நோக்கிக், கொ ண்டுபோய் மறையவைத்தாற் கொடுந்தழல் சுடாது மாயோ, கண்டத்தி னுவியார் தங்கடிமனைத் துறந்து காட்டுட், பண்டவா வுளநீங்கா தெற்பாவ மோ பரியு மென்றான்." இங்ஙனே புறத்தவ்வேடமன்றி யுள்ளத் தூய்மை யில்லாமுனிவர்க்குச் சிந்தாமணியிற் சீவகன்சொன்னன்.—"வானோர்புகழ் ந்து வணங்கியதுறவுந், தானோர்பயனிலை தாராதகத்தழுக், காறுளதே யெனி லகத்துளறத்தின், பேறுளதென்பது பிழையோவென்பார்." என்ப

திவையு மித்தொடக்கத்தனபலவுங் கரிப்புறத்திணையாம். இவ்வாறேனைத் திணைவேண்டுளி விரித்துக்கூறுக. அன்றியும், கம்பருயுத்தகாண்ட மிராவணன் மந்திரப்படலத்திற் பரதாரத்தைச் சிறைசெய்ததின்று வென்றவனைவிடத்துணியும்படி தேற்றப்பொருளாய்ப் பலவகத்திணையும் புறத்திணையுங் கொண்டுரைத்தவாறுகாண்க.—"ஒவியமமைந்த நகர்தீயுணவிளைத்தாய், கோவியல் பழிந்ததென வேறொரு குலத்தான், றேவியை நயந்து சிறைவைத்த செயனன்றோ, பாவியருறும் பழியிதிற் பழியுமுண்டோ." "என்றொருவனில் லுறைதவத்தியையிரங்க, வன்றொழிலினாய்மறைதுறந்து சிறைவைத்தா, யன்றொழிவதாயின வரக்கர்புகழையா, புன்றொழிலின் மிசைபொருந்தல் புலமைத்தோ." என்பதிவையும் பலவுமியல்பகத்திணையாம்.—"தூயவர்முறைமையே தொடங்குந் தொன்மையோ, ராயவர்நிற்க மற்றவுணராதியார், தீயவரறத்திறுற்றேவராயது, மாயமோவஞ்சமோ வன்மையேகொலோ."—"அறந்துறந் தமரரை வென்ற வான்றொழிற், றிறந்தெரிந் திடலது தானுஞ் செய்தவ, நிறந்திறம் பாவகை யியற்று நீர்மையன், மறந்துறந் தவர்தரும் வரத்தின் மாட்சியால்." எனவிவைகாரண வகத்திணை.—"மூவரை வென்று மூவுலகு முற்றுறக், காவலி னின்றதுங் களிப்புங் கைம்மிக,வீவது முடிவென வீத்தல் வல்லது,தேவரை வென்றவர் யாவர் சீரியோர்." எனப்பொதுவெனுமகத்திணை.—"வினைகளை வென்று மேல்வீடு கண்டவ,ரொனையவொன்றியும்புது மிவர்தந்திமையான்,முனைவரு மமரரு முன்னும் பின்னரு,மனையவர் திறத்தினையாவ ராற்றினார்." எனவெதிர்மறையகத்திணை.—"கோனகர் முழுவதுநினது கொற்றமுஞ், சானகியெனும்பெயருலகினம்மனை, யானவள்கற்பினால் வெந்தவல்லது, வானரஞ் சுட்டதென்றுணரன் மாட்சியோய்." எனமுன்னவையகத்திணை.—"மீனுடை நெடுங்கடலிலங்கை வேந்தன்முன்,றூனுடைநெடுந்தவந் தளர்ந்து சாய்வதோர்,மானிடமடந்தையா லென்றன்வாய்மொழித், தேனுடையலங்கலா யின்றுதேர்தியால்." எனநூற்புறத்திணை.—"சொல்வரம் பெரியமாமுனி வரொன்பவர் கடந்துணை யிலாதோ,ரொல்வரம் பெரியதோளிருவரு மமரரோ டுலகம் யாவும், வெல்வரொன் பதுதெரிந் தெண்ணினார் நிருதர்வேர் முழுதும் வீயக், கொல்வரொன் றுணர்தலா லவரை வந்தினிய பேருறவு கொண்டார்." எனப்புறநிலையகத்திணை. இவ்வாறங்ஙனமுரைத்த பலவுங்காண்க. அன்றியுஞ் சிந்தாமணியுட் சாரணர் சீவகற்குறுதி சொல்லித் துறவிற்கவன்றுணியும் பொருட்டுத் தேற்றப் பொருளாய்த் துறவில் 138 - ஞ்செய்யுட் டொடங்கி யுரைத்த பலவற்றைக்காண்க. அவற்றுள், "பாற்கடற் பனிமதிப் பாவைத் திங்கதிர், மேற்பட மிகநனி சொரிய தொப்பவே,நூற்கடன் மாதவ னுனித்த நல்லறங், கோற்கடன் மன்னனுக் குரைக்கு மென்பவே." எனவெடுத்தபொருட்டொகையுரைத்தவாறு.—"அருமையினெய்தும் யாக்கையும் யாக்கையினிழிவுந், திருமை நீங்கிய துன்பமுந் தெளிபொருட் டுணிவுங்,குருமை யெய்திய குணநிலை கொடைபெறு பயனும், பெருமை வீட்டொடு பேசவல் கேளிது பெரி

யோய்.' என வவனுரைப்பா னெடுத்த பொருளை மேலேதொகுத்துக் காட்டி னபின்னரீங்கே பிரித்து வகுத்தவாறு காண்க. இனியப்பிரி வொன்றொன் றாய்ப் பலதிணைவகையா லுரைப்பது கண்டுகொள்க.—"விண்டுவேய் நரலூ ன்விழைகான வரிடமுங், கொண்டுகூர் பனிகுலைத் திடுநிலைக் களக்குறும்பு, முண்டுநீ ரொனவுரை யினுமரியன வொருவி, மண்டுதீம் புனல்வளங் கெழுமா டெய்தலரிதே.'' 141.முதற்பலவும் வகையகத்திணையா னற்பிறப்பெய்தி நல் லுடலெய்து மருமையைக் காட்டினவாறு.—"இன்னதன்மையி னருமையி னெய்திய பொழுதே, பொன்னும் வெள்ளியும் புணர்ந்தெனவயிற்றகம்பொ ருந்தி, மின்னுமொக்குளு மெனாநனி வீயினும் வியும், பின்னைவெண்ணெ யிற்றிரண்டபின் பிழைக்கவும்பெறுமே.'' 149-என்பதாதி யேழுமுறைத் தபின்.—"தேங்கொள்பூங்கண்ணித் திருமுடித்திலகவெண் குடையோ, யீங் கிதன்றியு மிமையவர்மையலாக்கடந்த, தாங்குமா வண்கைச்சக்கரமிக்குயர் பிறரும், யாங்கணுரவரூரொடு பெயரொமக் குரையாய்.'' என வெட்டுச் செ ய்யுளானும் வகையகத்திணையானு மத்தாட்சியுவமையகத்திணையானு முட னில்லாமைக்காட்டினது.—"வெவ்வினைசெய்யு மாந்தருயிரொனு நிலத்தில் வித்தி, யவ்வினை விளைவுளுண்ணுமவ் விடத்தாவதுன்ப, மிவ்வெனக்கி ளத்து மென்றுநினைப்பினும் பிணிக்குமுள்ளஞ், செவ்விதிற்சிறிது கூறக் கேண்மதிசெல்வவேந்தே.'' 154-முதலாக 188-ஈறாகப் பாவத்தானரகத் தில் விளையுந் துன்பங்களைக் கண்முன்வைத்தாற்போலச் சித்திரமுதற்பல வலங்காரவகையானும் பலதிணைவகையானும் விழுமியபொருளாயுரைத் தவாறுகாண்க. அங்ஙனமெடுத்த மற்றவற்றையு மியல்புவமைபுறநிலை முத லியதிணைகளால் விரித்தவாறு கண்டுகொள்க. எ-று.



## நான்காவது:—தொகையுந்துணிவும்.

## 4. Summary and Conviction.

**163.** ஒருங்கு முன்விரித் துரைத்தவை மீண்டு
சுருங்கக் காட்ட றொகை யென்றாகும்.

(இ-ள்.) நிறுத்த முறையானே தொகையாமா றுணர்த்துதும். தன் பொருடோன்றப் பலகாரணவகையால் விரித்தவற்றை யீற்றின்கண்ணொ ருங்குடன் றொகுத்துக்காட்டல் தொகைவழி யெனப்படும். ஆகையிற்பி ரிந்த படையணிகூட்டிப் பகையைத்தாக்குவார் போலவும், கணையேதைத் துள்ளுருவக் கூர்முனைகூட்டுவார்போலவு, மேற்றின கோபுரமழகுபெற மே ற்சிகரம் பொருத்துவார் போலவும், பூங்காவனத்திற் பிரிந்து பூத்த பன்மல ரொரு செண்டாகத் தொடுப்பவர் போலவும், தானுநினைத்த பயனையடை தற் பொருட்டுப் பலதிணைவகையால் விரித்துக்காட்டிய நியாயங்களொரு

ப்படச் சுருக்கிக் கேட்போர்மனத் துள்ளுருவவுரைப்பது, தொகை யெனக் கொள்க. இனி யுதாரணங்காட்டுதும். எ-று. (ச)

**164.** பன்மனந் துணியவுட் படுத்த றுணிவாந்
துன்னிய வணித்தொகைத் துணிவிற் குரித்தே.

(இ-ள்.) துணிவா மாறுணர்த்துதும். மேற்கூறியபடி விரித்தவற்றைச் சுருங்கக்காட்டி வருகையிற் கருதியபயனை யடையும் பொருட்டு மற்றவர் துணிவதற்கேற்ப வுரைப்பது துணிவெனப்படும். ஆகையிற் குறித்த தத்தம் பொருட்குரித்தாகக் கேட்பவர் துயரத்திரங்கவுஞ் சினத்திலெரியவுந் தீமைக்கஞ்சவு மொன்றனை யொருவவு மற்றொன்றனை மருவவு மல்லவை வெறுப்பவு நல்லவை விரும்பவு மற்றைப் பற்றுதல்களைப்பிற் கேட்டோர் மனமே தன்வசமாக்கி யுழுது வித்தியபைங்கூழ் பழுத்துழிக்கொய்து தெளித்த செந்நெல் கொள்வது போலப் பதிகமுதலிய வழியாற்றேடிய பயனைத்தருவது துணிவென்றுணர்க. ஆகையிலதற்கதற்கேற்ப மடக்கு வினு விபாவனை முதலிய வலங்காரங்க ளொன்றன்மேலொன்றை யடுக்கி நடக்குந் துணிவெனக்கொள்க. சிந்தாமணி மேற்காட்டிய துறவிடத்துப்பலவற்றை விரித்து நெடிதாயுரைத்தபின்பு தொகையாய்க் கூறியவாறு:—"அல்லித்தாளற்றபோது மருதநூலதனைப்போலத், தொல்லைத் தம்முடம்பு நீங்கத் திவினைதொடர்ந்து நீங்காப், புல்லிக்கொண்டு யிரைச்சூழ்ந்து புக்குழிப்புக்குப்பின்னின், றெல்லையிறுன்பவெந்தீச் சுட்டெரித்திடுங்க ளென்றே."—"அறவியமனத்தராகி யாருயிர்க்கருளைச்செய்யிற், பறவையுநிழலும்போலப் பழவினையுயிரோடோடி, மறவியொன்றுனுமின்றி மனந்ததே சுரக்குநல்லான், கறவையிற்கறக்குந்தன்னுற் காமுறப்பட்டவெல்லாம்." எனவிவைபலவு முரைத்துத் தொகையாய்க் கூறியவாறு.—"பொய்யொடுமிடைந்த பொருளாசையுருளாய, மைபடுவினைத்துகள் வழங்குநெறிமாயஞ், செய்தபொருள் பெய்தகலஞ் செம்மைசுடு செந்தீக், கைதவ னுணித்த கவருட லொழிகென்றுன்." 261. என்பதிவையும் பலவுங் கூறித்துணிவு வழங்கினவாறு காண்க. அங்ஙனந் தேம்பாவணியிற் காமம்விளைவிக்குந் தீயவினைக் காட்டியதனைவிடற்கு வாமனுக்குறுதி பலவற்றையும் பலதிணை வகையால் விரிவாய்க்கூறிய பின்னர்த் தொகையுந் துணிவுமாகச் சொன்னவாறு.—"ஐம்பொறிப் பகைகண்டஞ்சி யடக்கலினுமைபோல் வாய், வெம்பொறிப் புதவையோர்ந்து வினைபகை சிறிதென்றெண்ணல், பைம்பொறிப் பாந்தடங்கூர்ப்பல்பட மதநீர்க்குன்றிற், செம்பொறிப் புகைக்கண்யானைச் சிதைந்துயிர்மாளுமன்றே."—"பிரிந்ததென்றொழித்தபாவம் பெறுமிடத் தனுகேல்வேலோ, யரிந்ததென் றுறங்குமாசை யமைதியால் விழித்துக்கொல்லு, மெரிந்தநின் காமத்தீயை யீற்றறவவித்ததென்னேல், கரிந்ததென்றிருந்தபற்காற் கான்முகத்தெரியுந்தீயே."—"குலம்புரி கொடியபேய்கள் கொலைத்தொழிற் கருவிசூழ்ந்து, சலப்புரி வலையைவைக்கத் தளப்படிற் பிரிதல

ற்று, வலம்புரி தவத்தினு மவ்வலையுற் றிலகல் வேண்டுங், கலம்புரி பைம்பூ ணழ்கிக் கதிர்த்த பொற்குன்றின் மார்போய்."—"கச்சொன் றிட்டுணர் வொடுக்கங் கட்டிமெய்ச் சகட்டை யோட்டி, நச்சொன் றிட்டே தச்சேற் றுண்ணல் லுயிரச் சிற்றுன்மற், றச்சொன் றிட்டோ் தறேற்று தழும்பலர் கண்டீர் நல்லோர், மெய்ச்சொன் றிட்டச் சிறுமுன் வீடுற வூர்மின் பாகீர்." என்பன பலவுந் தொகையுந் துணிவும் வந்தவாறு காண்க. எ-று. (உ)

ஐந்தாவது:—உரிமை.

## 5. Characteristics.

**165.** எப்பொருளெவ்வழி யியம்பினு மதற்கதற்
குரிய வுரைப்ப துரிமையாங் கால
மிடம் பண்பொழுக்கிறை யெனவைங் கூற்றே.

(இ-ள்.) உரிமையு முரிமைவிகற்பமுமா மாறுணர்த்துதும். மேற்கூறிய பதிகமுதலெவ்வழிக்கண்ணு மெவ்வகை விழுமியபொருளை யுரைப்பினு மவற்றவற்றுரிமை வழுவாதுரைப்பது முறையெனக்கொள்க. ஆகையிற் காலமு மிடமுங் குணமு முலகினொழுக்கமுஞ் சொல்லு மெனவைந்தினை யும்பற்றி வருமுரிமை யைவகைப்படு மெனக்கொள்க. இவற்றைத் தனித் தனி விளக்குதும். எ-று.

காலவுரிமை.

## Time.

**166.** காலமே பருவம் பொழுதென விரண்டாய்ப்
பருவங் கார்கூதிர் பனிமுன்பின் வசந்த
மெரிமுதிர் வேனி லென்றிரு மூன்றே.

(இ-ள்.) காலவுரிமையாமா றுணர்த்துதும். பருவமும் பொழுதுமெனக்காலமிருவகைத்தே. அவற்றைப் பெரும்பொழு தெனவுஞ் சிறுபொழு தெனவுங் குறிப்பாரெனக்கொள்க. அவற்றுட் பருவமறுவகைப்படும். அவையே கார்ப்பருவம், கூதிர்ப்பருவம், முன்பனிப்பருவம், பின்பனிப்பருவம், இளவேனிற்பருவம், முதிர்வேனிற்பருவம், எனவாறென்ப. அவையே யாவணி முதலொவ்வொன்றிற் கிருமதி யெல்லையாக வருமெனக்கொள்க. அவற்றுளிளவேனிலெனினும் வசந்தமெனினுமொக்கும். ஆகையிலவ்வப் பருவத்துரிமையை யினிக்காட்டுதும்.—இலக்கண விளக்கம்.—"காரேகூதிர்முன்பனி பின்பனி, சீரிளவேனின் முதுவேனி லென்றாங், கிருமூன்று திறத்ததுபெரும்பொழுதவைதா, மாவணிமுதலா விரண்டிரண்டாக, வாடியிறுதிய வாயுங்காலே."—அகப்பொருள் விளக்கம்.—"காரேகூதிர்

முன்பனிபின்பனி, சிரிளவேனில் வேனிலென்றுந், இருமூன்று இறத்த து தெரிபெரும்பொழுதே." இவைமேற்கோள். எ-று. (௧)

**167.** கார்க்காலத் துரிமை கார்க்கா லுருட்டிய
வாடையே கோப மயிலே கேகயங்
கோடல் செங்காந்தள் கொன்றை கூதாளந்
தண்டமி லுயவை தளவு கடம்பஞ்சனி
வெண்குருந் தலர்தலே வியங்கங் கிளிகுயி
னீங்கலே நீர்மல ரோங்க லென்ப.

(இ-ள்.) கார்ப்பருவத்துரிமையா மாறுணர்த்துதும். வாடைவீசலும்; இந்திரகோபமு மயிலுங்கேகயப்புள்ளுந் தோன்றிமகிழ்தலும்; வெண்காந்தள், செங்காந்தள், கொன்றை, கூதாளம், வேங்கைமரம், காக்கணஞ்செடி, முல்லை, கடம்பு, காயா, குருந்தெ‌ன விவையேமலர்தலும்; அன்னங் கிளிகுயிலகன்று வருதலும்; தாமரைமுதனீர்மலரோ யொளித்தலும்; கார்ப்பருவத்துரிமை யெனப்படும். எ-று. (௨)

**168.** கூதிர்க் குரிமை கூதிரே குருகே
வோதிமங் குரண்ட மொண்மதிச் சகோர
முதுவளை ஞெண்டு ருநத்து வத்த
னீரோ தெளித னீர்மீன் சனித்தல்
காரோ சூற்கொளல் பாரிசா தஞ்சந்
தாரம் பித்திகை மந்தார நாணன்
முற்றலர்ந் துவத்தலே மற்றுயிர் நைதலே.

(இ-ள்.) கூதிர்ப்பருவத்துரிமையா மாறுணர்த்துதும். கூதிர்க்காற்று வீசலும், குருகு மன்னமுங் கொக்குஞ் சகோரப்புள்ளுஞ் சங்கு நண்டு நத்தையுமென விவை மகிழ்தலும், நீரோ தெளிதலும், மீனினஞ் சனித்தலும், மேகஞ் சூற்கொள்ளலும், பாரிசாதஞ் சந்தனஞ் சிறுசெண்பகஞ் செம்பரத்தை நாணலென விவை மலர்தலும், ஈண்டுக் கூறிய வுயிரோ யன்றி மற்றைப் பறவை விலங்கு மக்களொருங்குடன் வருந்தலும், கூதிர்ப் பருவத்துரிமை யெனப்படும். எ-று. (௩)

**169.** முன்பனிக் குரிமை துன்பனிக் கடறருங்
கொண்டல் வீசலுங் கூண்டசை சிதகன்
மண்டிருட் கூகைகூன் மனமகிழ்ந் தொலித்தலு
மாந்தருச் சாமந்த மலர்தலு மிலந்தை
திங்கனி யுதிர்தலுந் தீயெனக் குன்றி
காய்த்தலு நெல்லொடு கரும்பு முற்றலுமாம்.

(இ-ள்.) முன்பனிப் பருவத்துரிமையா மாறுணர்த்துதும். கொண்ட ற்காற்று வீசலும், தூக்கணங் குருவியுங் கூகையு மாந்தையுமென விவைம கிழ்தலும், மாவுஞ் சிவந்தியு மலர்தலும், இலந்தைப் பழுத்தலும், குன்றிக் காய்த்தலும், செந்நெல் விளைதலும், கரும்புமுதிர்தலும், முன்பனிப் பரு வத் துரிமை யெனப்படும். எ-று. (௪)

**170.** பின்பனிக் குரிமை பேசுங் காலை
யுலவை வீசலே யுளபல புறவினம்
வலிது கூய்க்கான வாரணங் களித்தலே*
கோங்கில வலர்தலே குரவ நெடும்பனை
தீங்கனி யுதவலே சிதப்பரி வெடித்தலே.

(இ-ள்.) பின்பனிப் பருவத்துரிமையா மாறுணர்த்துதும். உலவைக்காற் று வீசலும், பலபுறவினமுங் கானக்கோழியு மெனவிவை மகிழ்தலும், கோ ங்குமிலவும்பூத்தலும், பேரீந்துபனையென்றிவையேபழுத்தலும், பருத்திவெ ண்சுளை வெடித்தலும், பின்பனிப்பருவத்துரிமை யெனப்படும். எ-று. (௫)

**171.** வசந்தத் துரிமை வசந்தற் றேரொனுந்
தென்றலே வண்டினஞ் சிறுகிளி பூவை
யன்றிலே குயிலிவை யகமகிழ்ந் தார்த்தலே
மாங்கனி யுதிர்தலே தேங்கய மலரொடு
வகுளந் தாழை வழைசெண் பகம்பிற
முகிழினி தவிழ்த்தலே முன்கா ரிடைக்களி
மிகுவன் மயின்முதன் மெலிதலே யென்ப.

(இ-ள்.) இளவேனிற் பருவத்துரிமையா மாறுணர்த்துதும். மன்மத ன்றேராகிய தென்றல்வீசலும், பலவண்டினமுங் கிளியும் பூவையு மன்றி லுங் குயிலு மென விவை மகிழ்தலும், மாங்கனி யுதிர்தலும், நீர்மலரன்றி மகிழ் தாழை புன்னை செண்பகம் பலவு மலர்தலும், கார்ப்பருவத்து மகி ழ்ந்தகோபங் கேகயப்புள் மயிலிவையே மெலிதலும், இளவேனிற் பரு வத் துரிமை யெனப்படும். எ-று. (௬)

**172.** வேனிற் குரிமை கானிற் றூசெழக்
கோடையே வீசக் குறுகப் பேய்த்தேர்
காடையே வலியான் கம்புள் காகஞ்
சிரவ மொலித்தல் புருண்டி சிந்துரம்
பாடலம் பூத்தல் பாலைக் கனியொடு
கோடர காவல் குலிகங் காய்த்த
னீரலகன் மற்றுயிர் சீரலகிச் சோரலே.

(இ-ள்.) முதிர்வேனிற் பருவத்துரிமையா மாறுணர்த்துதும். எங்குந் தூசெழும்படி கோடைக்காற்றுவீசலும், கானற்றோன்றலும், காடையும்வலியானும் வானம்பாடியுங் காகமுங் கவுதாரியுமென விவைமகிழ்தலும், மல்லிகை புளி பாதிரி யென்றிவை பூத்தலும், பாலை காஞ்சிரம் நாவ லிலுப்பை யென்றிவைக்காய்த்தலும், நீரோகுறுகலும், ஈண்டுக்கூறிய வுயிரோயன்றி மற்றெலாங்குழைந்து சோரலும், பூவுலகழகு குன்றவருமுதிர்வேனிற் பருவத்துரிமையெனப்படும். ஆகையி லவ்வவப் பருவத்திம் முறைவழுவாது காத்தல் பருவத்துரிமையெனப்படும். இவ்வாறன்றி யொன்றற்குரியன பிறிதொன்றற்குரைப்பது பருவமலைவாம். (உ-ம்.) வெண்பா.—"வளைவாய் களித்து மயிலகவத் தாழை, களைவாய் முகைத்துக் கமழ—விளைவாய்த், தளவேமுகைநெகிழத் தண்கொன்றை பூப்ப, விளவேனில் வந்துலவிற் றின்று." இதனின்மயில்களித்தகவலு முல்லைகொன்றை யென்றிவைபூத்தலுங் கார்ப்பருவத்திற்குரியனவாகி யிளவேனிற்பருவத் துரியனவாகத் தோன்றப்புணர்த்தமையாற் பருவமலைவாயிற்று. பிறவுமன்ன. ஆயினுமடுத்தபருவத்துரியன வொன்றிரண்டொரோவிடத்து விரவி மயங்கினும் வழுவன்றெனக்கண்டுணர்க. அங்ஙனம் கம்பர் கிஷ்கிந்தாகாண்டக் கார்காலப் படலத்துக்கார் கூதிரொன் றிருபருவத்துக்குரியன சிலவற்றை மயங்கவைத்தவாறு காண்க. நைடதத்தோவெனி லிளவேனிற் படலத்திற் சொன்னதாவது:—விருத்தம்.—"கள்ளுயர்த் தலரு முல்லைக் கடிமுகை முறுவ றோன்ற, வள்ளிதழ்க் குவளை யுண்கண் மலர்ந்து மாந்தளிர்மென் கையாற், கிள்ளை மென்குதலை சாற்றிக் கிளரொளி வண்டு பாணற், றெள்விளிப் பாட வேனிற் றிருமகள் சிறந்த தன்றே." மீளவும், "அரவ மேகலை யாயிழை யார்க்குயர், குரவம் பாவை கொடுத்த கொழுதிமென், முருகுலாமணி மொய்த்த கடம்பினம், பரிவி னுடவெண் பந்து கொடுத்தவே." என்பனவற்றுள்ளே முல்லையுங் கடம்புங் கார்ப்பருவத்துரிய மலராகையி லிளவேனிற் பருவத்தலர்ந்தனவாகக் கூறியமையாற் பருவமலைவாயிற்றென்மனூர் புலவர். ஆகையிலிவ்வகை வழுவாராமற் காத்தலறிவோர் கடனெனக்கொள்க. எ-று. (எ)

**173.** பொழுதென மாலைக் கெழுயாமம் வைகறை
யெற்றோற்ற நண்பக லெற்பா டெனவாறே
மாலைக் குரிமை மலர்த லுற்ப லம்புள்
சோலைசேர்ந் தொலித்தல் சுரபி கனைத
றுன்னடைத் தாமரை சுளித்தெனக் கூம்பல்
கன்னடங் காம்போதி கனியப் பாடலே
யாமத் துரிமை யாகரி பாடலே
யூமன் சகோர முவரி யுவத்தலே
காம மஙினதங் கரவென் றிவையே

வைகறைக் குரிமை வாரணங் கூவன்
மெய்யெனக் கனவுறன் மீனொளி குன்றல்
வாமமீ னுதித்தன் மாதவர் வாழ்த்த
லிராமகலி யுடனிந் தோளம் பாடலே
விடியற் குரிமை விலங்கொடு மற்றுயிர்
கடிமகிழ்ந் தெழுச்சி காவொடு கமலம்
விரிபூ மலர்தல் வெண்பனி துளித்த
றெரிபூ பாளந்தே சாட்சி பாடலே
நண்பகற் குரிமை நயத்தல் கோகம்
வெண்பே யோடன் மேதி நீராடல்
பண்டிசை சாரங் கம்பாட லென்பவே
வெற்பாட் டுரிமை வெற்பாளி முனீளல்
வானஞ் சிவத்தன் மறியினங் குதித்தல்
கானமாய்க் காபி கலியாணி பாடலே.

(இ-ள்.) சிறுபொழுதுரிமையா மாறுணர்த்துதும். ஒளிபோ யிருளே புகும்பொழுதாதி யொவ்வொரு பொழுதிற் கீரைந்துநாழிகை யெல்லையாக மாலையும், யாமமும், வைகறையும், விடியலும், உச்சிப்பகலும், மெற்பாடு மென வறுபொழுதிவையெனப்படும். எற்றேற்றமெனினும் விடியலெனினு மொக்கும். இவற்றுட்குவளைமலர்தலும், புள்ளினஞ் சோலைகடோறுமடைந்து கலகலெனப்பெரி தொலித்தலும், பசுமுதற்கறவைகள் கன்றையுள்ளிக் கனைந்[illegible]ருதலும், தாமரைகூம்பலும், கன்னடங்காம்போதியென வீரிராகம்பாடலும், மாலைப்பொழுதிற் குரிமையெனப்படும். ஆகரிராகம்பாடலும், கூகையோடுசகோர மகிழ்தலும், பெருங்கடலுவந்தெனப் பொங்கலும், காமமு முழுதொலியின்மையுங்களவு மென்றிவை மிகுதலும், யாமப்பொழுதிற் குரிமையெனப்படும். கோழிகூவலும், மெய்போற்றெளிந்த கனாத்தோன்றலும், வான்மீனொளியேகுறைதலும், வெள்ளிமீனுதித்தலும், மாதவரொழுந்து தேவவாழ்த்துரைத்தலும், இராமகலியிந்தோளமென வீரிராகம்பாடலும், வைகறைப்பொழுதிற் குரிமையெனப்படும். விலங்கு பறவை மக்கண் முதலிய வுயிரெலா மகமலர்ந்துவத்தலும், பூங்காவனத்துள் பூண்டுப்பூ கொடிப்பூ கோட்டுப்பூ வன்றியும் நீர்ப்பூவகையுட்கமல மலர்தலும், பூபாளந்தேசாட்சி யெனவீரிராகம்பாடலும், விடியற்பொழுதிற்குரிமையெனப்படும். சக்கரவாகப்புள் மகிழ்தலும், கானலெனும் பேய்த்தேரோடலும், எருமைகள் நீரிற் பாய்ந்து கிடத்தலும், சாரங்கராகம் பாடலும், உச்சிப் பொழுதிற் குரிமை யெனப்படும். மலைமுதனிழலெலா நீளலும், வானஞ்சிவத்தலும், பலவகை யாட்டுக்குட்டிகள் குதித்தலும், காபிகலியாணியென வீரிராகம்பாடலும், எற்பாட்டுப் பொழுதிற் குரிமை யெனப்படும். ஆகையி லவ்வவப் பொழு

திற் குரியவை தோன்ற முறைவிடா துரைப்பது பொழு தெனுங் காலவுரிமையாம். இவ்வாறன்றி யொன்றற்குரிய பிறிதொன்றிற் றோன்றக்கூறல் பொழுது மலைவாம்.—வெண்பா.—“செங்கமலம் வாய்குவியத் தேங்குமுதங்கண்மலர,வெங்குநெடு வான்மீ னினிதிமைப்பப்—பொங்குதையத், தோராழித்தேரோனெழிலாது வந்ததே, நீராழி சூழ்ந்த நிலம்.” இதிற்றாமரை குவிதலும், குமுத மலர்தலும்,வான்மீன் றோன்றலும், மாலைக்குரியனவாகிக் காலைக்குரியனவாக வுரைத்தமையாற் பொழுது மலைவாயிற்று.பிறவுமன்ன. ஆயினு மோரோவிடத்துச் சிறப்பித்துரைத்த பொருட் கலங்காரமாக விவ்வாறுரைப்பினுஞ் சிறப்பெனக்கொள்க. (உ-ம்.) வெண்பா.—“மண்டபத்து மாணிக்கச் சோதியால் வாவிவாய்ப், புண்டரிக மாலைப் பொழுதலருந்—தண்டரளத், தாமஞ்சொரியுந் தகைநிலவான் மெல்லாம்பல், பூமலருங்காலைப் பொழுது.”—இதனுட்டாமரை மாலையின் மலர்ந்ததாகவும், குமுதங் காலையின் மலர்ந்ததாகவும், பொழுதுரிமைமாறி யுரைத்ததாயினுஞ் சிறப்பலங்காரமாயிற்று. பிறவுமன்ன. இலக்கண விளக்கம்.—“மாலையாமம் வைகறை யென்று, காலை நண்பக லெற்பாடென்று, வறுவகைத் தென்ப சிறுபொழுதவைதாம், பகுசுடரமை யந்தொடங்கியையிரு, கடிகையளவை யகானுங்காலே.”—அகப்பொருள் விளக்கம். “அவற்றுள், கூதிர்யாமமுன் பனியென்றிவை, யோதியகுறிஞ்சிக் குரியவாகும்.—வேனினண்பகல் பின்பனி யென்றிவை, பான்மையி னுரியபாலை தனக்கே.—மல்கு கார்மாலைக் குரிய.— இருள்புலர்காலை மருதத்திற்குரித்தே.—வெய்யோன்பாடு நெய்தற்குரித்தே.—மருதநெய்தலென் றிவையிரண்டற்கு, முரியபெரும் பொழுதிரு மூன்றும்மே.” இவை மேற்கோள். எ-று. (அ)

—⁂—

## இடவுரிமை.

## Place.

**174.** குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந்திணைக் கெய்திய பெயரொன
வரையே சுரமே புறவே பழனந்
திரையே யவையவை சேரிடந் தானு
நிரையே யைந்திணை நிலமெனப் படுமே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே யிடவுரிமையாமாறுணர்த்துதும். இடவகுப்பினுண் முதல்வகுப்பாகக் குறிஞ்சி பாலை முல்லை மருத நெய்த லெனவிவையைந்நிலமெனவு மைந்திணையெனவும் வழங்கும். இவற்றுண்மலையு மலைசார்ந்தவிடமுங் குறிஞ்சி;சுரமுஞ் சுரஞ்சார்ந்தவிடமும் பாலை;காடுங்காடுசார்ந்தவிடமு முல்லை; வயலும் வயல்சார்ந்தவிடமு மருதம்; கடலுங்கடல்

சார்ந்தவிடமு நெய்தலென்று வகுத்தார் புலவரென்றறிக.—அகப்பொருள் விளக்கம்.—"வரையே சுரமே புறவே பழனந், திரையே யவையவை சேர்த ருமிடனே, யெனவீ ரைவகைத் தணையிய னிலமே." எ-து. மேற்கோள். இவற்று ளொவ்வொரு திணைக்கு வேறாகச் சில பொருள் வகுத்தவை கருப் பொருளென்றார் கற்றோர். இவை வருமாறு. எ-று. (க)

**175.** தெய்வஞ் செல்வர் சேர்குடி புள்விலங்
கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்.

(இ-ள்.) கருப்பொரு ளென்பவை யிவையென வுணர்த்துதும். தெய்வமுந் தலைவனுந் தலைவியுங் குடியும் பறவையும் விலங்கு மூரு நீரு மலரு மரங்களும் விளையு முணவும் பறையும் யாழு மிசைப்பாட்டுந் தொழிலு மெனச் சொல்லப் பட்ட பதினான்கு கருப்பொரு ளொவ்வொரு திணைக்கு வேறு வேறாக வுளவென வகுத்தார் கற்றோர். இவற்றுளோரிட மெல்லையுளடங்கா வெவ்விடத்து மெக்காலத்து மனைத்துலகு மனைத்துயிருந் தானுள வாக்கவு நிலையி னிறுத்தவு முழுதற வொழிப்பவும் வல்லவொரு மெய்க்கடவுளன்றிக் குறுங்கோற் றேவராகப் பலரிலொன்று மெய்ம்மறை நூலாலறிவோ மாயினு மிந்நாட்டிருள் வழிவழங்கு முறையைச் சொல்லிக் காட்டுதும்.—இலக்கண விளக்கம்.—" ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங், கூர்நீர் பூமர முணாப்பறை யாழ்பண், டொழி லெனக் கருவீ ரெழுவகைத் தாகும்." எ-து. மேற்கோள். எ-று. (உ)

**176.** குறிஞ்சிக் கருப்பொருள் குமரன் றெய்வமே
வெறியணிப் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயின் மறப்புலி குடாவடி
கறையடி சீயஞ் சிறுகுடி யருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்த
ளாரந் தேக்ககி லசோக நாகம்
வேர லைவனந் தோரை யேனல்
கறங்கிசைத் தொண்டகங் குறிஞ்சியாழ் குறிஞ்சி
வெறிகொ ளாவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தல் கொழுஞ்சுனை யாடலே.

(இ-ள்.) குறிஞ்சிக் கருப்பொருளா மாறுணர்த்துதும். குமரன் றெய்வமே; பொருப்பனும் வெற்பனுஞ் சிலம்பனுங் குறத்தியுங் கொடிச்சியுந் தலை

வனொடு தலைவியே; குறவருங் கானவருங் குறத்தியருங் குடியே; கிளியுமயிலு முரியபறவையே; புலியுங் கரடியும் யானையுஞ் சிங்கமும் விலங்கே; சிறுகுடி யூரே; அருவியுஞ் சுனையு நீரே; வேங்கையுங் குறிஞ்சியுங் காந்தளுஞ் சந்தனமுந் தேக்கு மகிலு மசோகும் புன்னையு மலரே மரமே; மூங்கினெல்லு ஐவனநெல்லுந் தோரைநெல்லுந் தினையு முணவே; தொண்டகம் பறையே; குறிஞ்சியாழ் யாழே; குறிஞ்சி யிசைப்பாட்டே; வெறி கொள்ளலும் ஐவனம் விளைத்தலும் பைந்தினை காத்தலுந் தேனை யழித்தலுங் கிழங்கு தோண்டலுஞ் சுனையிற் குளித்தலுந் தொழிலே; என விப்பதினால் வகையுங் குறிஞ்சிக் கருப்பொருளா மெனக் கொள்க. எ-று. (௫)

**177.** பாலைக் கருப்பொருள் பகவதி தெய்வமே
காளை விடலை மீளி யெயிற்றி
யெயின ரெயிற்றியர் மறவர் மறத்தியர்
புறாப்பருந் தெருவை செந்நாய் குறும்பு
குழிவறுங் கூவல் குரா அ மரா அ
வழிஞை பாலை யோமை யிருப்பை
வழங்குகதி கொண்டன செழும்பதி கவர்ந்தன
பறைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகலிற் சூறை பரிவெழுக் தாடலே.

(இ-ள்.) பாலைக் கருப்பொருளா மாறுணர்த்துதும். காளி தெய்வமே; காளையும் விடலையு மீளியு மெயிற்றியுந் தலைவனொடு தலைவியே; எயினரு மெயிற்றியரு மறவரு மறத்தியருங் குடியே; புறாவும் பருந்துங் கழுகும் பறவையே; செந்நாய் விலங்கே; குறும்பு தானூரே; கேணி நீரே; குராவு மராவுஞ் சிறுபூளையும் பாலையு மாவுங் கள்ளியு மலரே மரமே; ஓடிவழியிற் பறித்தனவும் புக்குமறு நன்னாட்டிற் றிருடினவு முணவே; துடி பறையே; பாலையாழ் யாழே; பஞ்சுரமும் வெஞ்சமமு மிசைப்பாட்டே; பகற்சூறை குளித்த றொழிலே; என விப்பதினால் வகையும் பாலைக் கருப்பொருளா மெனக் கொள்க. எ-று. (௬)

**178.** முல்லைக் கருப்பொருண் முராரி தெய்வமே
தொல்லைக் குறும்பொறை நாடன் றோன்றன்
மடியாக் கற்பின் மனைவி கிழத்தி
யிடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்
கான வாரண மான்முயல் பாடி
குறுஞ்சுனை கான்யாறு குல்லை முல்லை
கிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவங்
கொன்றை காயா மன்றலங் குருந்தக்

தாற்றுக் கதிர்வரகு சாமை முதிரை
யேற்றுப் பறைமுல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தாமுடன் வித்த
லவைகளை கட்ட லரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதன்
மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்
குரவை யாடல் குளித்தல் கான்யாறே.

(இ-ள்.) முல்லைக் கருப்பொருளா மாறுணர்த்துதும். விட்டுணு தெய்வமே; குறும்பொறை நாடனுந் தோன்றலுங் கற்பின் மனைவியுங் கிழத்தியுந் தலைவனொடு தலைவியே; இடையரு மிடைச்சியரு மாயரு மாய்ச்சியருங் குடியே; காட்டுக்கோழி புள்ளே; மானு முயலும் விலங்கே; பாடி யூரே; குறுஞ்சுனையுங் கான்யாறு நீரே; துளசியு முல்லையுங் காந்தளுங் கொன்றையுங் காயாவுங் குருந்தமு மலரே மரமே; வரகுஞ் சாமையுங் காராமணிப் பயறு முணவே; பம்பைப் பறையே; முல்லையாழ் யாழே, சாதாரி யிசைப் பாட்டே; சாமை வரகு விதைத்தலு மவற்றின் களைகளைக் கட்டலு மவற்றை யறுத்தலுங் கடாவிட் டவற்றைத் தெழித்தலுங் கொன்றையங் குழலூதலும் பசுமுதல் மூவின மேய்த்தலு மிடபந் தழுவலுங் குரவை யாடலுங் கான்யாறு குளித்தலுந் தொழிலே; என விப்பதினால் வகையு முல்லைக் கருப்பொருளா மெனக்கொள்க. எ-று. (௫)

**179.** மருதக் கருப்பொருள் வாசவன் றெய்வமே
விருதமை யூரன் வெண்டார் கிழவன்
கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி
யுழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்
மழலை வண்டான மகன்றி னாரை
யன்னம் போதா நன்னிறக் கம்புள்
குருகு தாரா வெருமை நீர்நாய்
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூர்
யாறு மனைக்கிண றிலஞ்சி தாமரை
நாறிதழ்க் கழுநீர் நளிமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதஞ்
செந்நெல் வெண்ணெ லந்நெல் லரிகிணை
மன்றன் முழவ மருதயாழ் மருத
மன்றணி விழாக்கொளல் வயற்களை கட்ட
ஞெயதல் கடாவிடல் பொய்கையா றாடலே.

(இ-ள்.) மருதக் கருப்பொருளா மாறுணர்த்துதும். இந்திரன் றெய்வமே; ஊரனுங் கிழவனுங் கிழத்தியு மனைவியுந் தலைவனொடு தலைவியே; உழவரு முழத்தியருங் கடையருங் கடைச்சியருங் குடியே; கொக்கு மன்றிலும் நாரையு மன்னமும் போதாவுங் கம்புளுங் குருகுந் தாராவும் பறவையே; எருமையும் நீர்நாயும் விலங்கே; பேரூரு மூதூரு மூரே; யாறு நீரே; மகிழுந் தாமரையுங் கழுநீருங் குவளையுங் காஞ்சியும் வஞ்சியு மருதமு மலரோ மரமே; செந்நெல்லும் வெண்ணெல்லு முணவே; கிணையு மணப்பறையும் பறையே; மருதயாழ் யாழே; மருத மிசைப்பாட்டே; திருவிழா வழங்கலும் வயலிற் களைகட்டலு நெல்லை யறுத்தலுந் தெளித்தலுங் குள நீராடலும் யாற்றுநீர் குளித்தலுந் தொழிலே; என விப்பதினான்கு மருதக் கருப்பொருளா மெனக்கொள்க. எ-று. (௬)

**180.** நெய்தற் கருப்பொரு ணீரான் வருணனே
மொய்திரை சேர்ப்பன் றுன்னீர் புலம்பன்
பரத்தி நுளைச்சி பரதர் பரத்தியர்
நுளையர் நுளைச்சிய ரளவர ளத்தியர்
காக்கை சுறவம் பாக்கம் பட்டினம்
முவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவுமீ னுப்பு விலைகளிற் பெற்றன
களிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
விளரியாழ் செவ்வழி மீனுப்புப் படுத்த
லுணக்கல் விற்றல் குணக்கட லாடலே.

(இ-ள்.) நெய்தற் கருப்பொருளா மாறுணர்த்துதும். வருணன் றெய்வமே; சேர்ப்பனும் புலம்பனும் பரத்தியு நுளைச்சியுந் தலைவனொடு தலைவியே; பரதரும் பரத்தியரு நுளையரு நுளைச்சியரு மளவரு மளத்தியருங் குடியே; கடற்காக்கைப் பறவையே; சுறு விலங்கே; பாக்கமும் பட்டினமு மூரே; உவர்நீர்க்கேணியுங் கடலு நீரே; தாழையு முட்செடியு மடம்பு முள்ளிச் செடியும் புன்னையுங் கோங்கு மலரோமரமே; புலவு மீனுமுப்பும் விற்றுக்கொண்டனவு முணவே; மீனுங் கோட்பறையும் பம்பையும் பறையே; விளரியாழ் யாழே; செவ்வழி யிசைப்பாட்டே; மீனுப்புப் படுத்தலு மீனை யுணக்கலு முணங்கிய வற்றை விற்றலுங் கடனீர் குளித்தலுந் தொழிலே; என விப்பதினால்வகையு நெய்தற் கருப்பொருளா மெனக்கொள்க. ஆகையி லிவையு மித்தொடக்கத் தனபலவு மொவ்வொரு நிலத்திற் குரியவாகி யொன்றன் பொருண் மற்றொன்றற் குரையாது முறையைக் காப்பதிட வுரிமை யெனப்படும். எ-று. (௭)

**181.** இடனெனப் படுவது மலைநா டியாறே.

(இ-ள்.) மற்றொரு வகுப்பிட வுரிமையாமாறுணர்த்துதும். மேற்கூறிய வைந்திணை வகுப்பன்றி மலையு நாடும் யாறுமென மற்றொரு மூவகைப்படு மிடமெனக்கொள்க. இவற்றுட் பொதியமு மிமயமு முதலிய மலைகளே மலையும், மகதமுதற் பதினெண்பாஷை நிலங்களே நாடும், கங்கை பொருநை காவிரி முதலிய யாறுகளே யாறுமெனக்கொள்க. இவற்றுளொன்றன் பொருண் மற்றொன்றி னுளவாகச் சொல்லாததற் கதற்குரிய வற்றைத் தந்துரைப்ப துரிமையெனப்படும். இவ்வாறன்றிப் பொன்மலைச் சந்தனமெனவுந் தென்மலை மதகரியெனவும் பொதியிற் குரியன பொன்மலைக்கண் ணுளவாகவும், பொன்மலைக்குரியன பொதியின்கண் ணுளவாகவு முரைப்பின் மலையெனு மிடவழுவாமெனக்கொள்க. பிறவுமன்ன. அங்ஙன மொவ்வொரு மலைநாடி யாறுகட்கு முரிமையைத் தமிழ்நூலிடத்துக்காண்க. ஆயினு மொன்றனைப் புகழுமிடத் திவ்வுரிமைமாறி யில்லனவு முளவெனப் புனைந்துரையாகச் சொல்லினும் வழுவென் றிகழா தலங்கார மென்று கொள்பவர் முற்றறிவுடையோ ரெனக் கண்டுணர்க—தண்டியலங்காரம்.—"இடமெனப் படுவது மலைநாடியாறே" எ-து மேற்கோள். எ-று. (௫)

## பண்புரிமை.

### Nature.

**182.** பண்பெனச் சாதியும் பற்றலு மளவையும்
வண்ணமும் பலவும் வகுத்தனர் புலவர்.

(இ-ள்.) நிறுத்த முறையானே பண்புரிமையா மாறுணர்த்துதும். ஈண்டுப் பண்பெனுஞ் சொல்லா லவனவன் பிறந்த சாதியு நெஞ்சிற் பற்றிய பற்றுதலு நால்வகை யளவு மைவகை வண்ணமு மறுவகைச் சுவையு மெழுவகை யிசையு மெண்வகையூறு முதலிய பலவும் வரப்பெறும். இவற்றை யினித் தனித்தனி விளக்குதும். எ-று.

## சாதித்தொழிலுரிமை.

### Caste Employment.

**183.** வன்னியர் மன்னர் வணிகர் சூத்திர
ரென்னிவர் நால்வர்க் கியல்வன வுரைக்கி
லோதற் றொழிலுரித் துயர்ந்தோர் மூவர்க்கு
மல்லாத கல்வி யெல்லார்க்கு முரித்தே.

(இ-ள்.) நிறுத்தமுறையானே சாதியுரிமையாமாறுணர்த்துதும். ஆகையில் அந்தண ரரசர் வணிகர் சூத்திரரென விந்நாட்டில் வழங்கு முயர்சாதியிற் பிறந்த நால்வராகி மற்றவ ரிழிந்தோரெனப் படுவரென் றுணர்க. இந்நாட்டு வழக்கம்பற்றி யவ்வவச் சாதிக்குரிய தொழிலை விளக்குதும். ஆகையினுவினுற் கற்குந்தொழிலுள் வேதத்தை யோதியுணர்த லந்தண ரரசர் வணிகரென மூவர்க்கு முரித்தே யொழிய சூத்திரர்க்குத் தகாதெனவும், வேதநூலொழித்தொழிந்தகல்வியாவையு முணர்த னல்வர்க்கு முரித்தெனவுங் கூறுவாரெனக்கொள்க. ஆயினும் வாயாலுணப்படு முடற்குணு யார்க்கும் பொதுமைய வாகையிற் காதாலுணப்படு முயிர்க் குணுவாகிய மெய்ம்மறை யோதல் சிலர்க்கு விலகல் கொடுமையன்றே.மீளவு மறையே பரகதி வழியைக்காட்டுவ தாகையில் அனைவரும் பொதுப்பட வக்கதிக் குரியராகப் பிறந்த பின்னரவ்வழி யுணர்தல் பொதுமைத் தன்றென விதிப்பது நிறையோ. ஆகையில். வெண்பா.—"பூரியர்க் கோதன்மின் பொய்யா மறையென்பா,ராரியராய்த் தாங்கண் டறியாரோ - பேரலையு, மொய்மணலார் கானகமு முட்கடமு நீர்மல்கப், பெய்முகில் வான்பின்றுச் சிறப்பு"—"கற்றெருத் தொழுகார்க்குக் காசறுத்த வேதநூல், சொற்றற்க வென்பார்க்குத் தோன்றுரோ-பற்றற்ற, காவியுநீலமுநீவிக்கதிர்க்கையான்,மேவியவிண்வேந்தனன்பு."என்றூர்மெய்ம்மறையாசாரியனுர்.—இலக்கணவிளக்கம்.— "ஓதற்றெழிலுரித்துயர்ந்தோர்மூவர்க்கும்"-"அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே." இவைமேற்கோள். எ-று. (க)

**184.** படைக்கலம் பயிறலும் பகடாதி யூர்தலு
முடைத்தொழில் பின்மூவர்க் குரைத்திசி னேரே.

(இ-ள்.) இதுவுமது. படைக் கலங்களை வீசி யெறிந்தே யதெஃகிச் செய்தொழிற் கற்றலும் யானையுங் குதிரையுந் தேரு மேறி யூர்தலுமாக நாவினுற் கற்குந் தொழி லல்லாத தொழில்க ளந்தணரொழித் தொழிந்த மூவர்க்கு முரிய வென்பார்.—இலக்கணவிளக்கம்.—" படைக்கலம் பயிறலும் பகடு பிறவூர்தலு, முடைத் தொழி லவர்க்கென வுரைத்திசினேரே." எ-து. மேற்கோள். எ-று. (உ)

**185.** அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தாய்
மற்றைக் காவல் கொற்றவர்க் குரித்தே.

(இ-ள்.) இதுவுமது. அறப்புறங் காவலென்றும், நாடுகாவலென்றும், காவ லிருவகைப்படும். இவற்று ளறப்புறங் காவலே நால்வர்க்கும் பொதுமைத்தாகி நாடுகாவ லரசர்க் குரித்தெனக்கொள்க.—இலக்கண விளக்கம்.-"அவற்றுள், அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தே"—"மற்றைக் காவல் கொற்றவர்க் குரித்தே." இவை மேற்கோள். எ-று. (௩)

**186.** வேதமாந்தர் வேந்த ரென்றிரு வர்க்குந்
தூது போதற் றெழிலுரித் தாகும்.

ரற் றேன்றி வெஞ்சினவே றுட்கொளினும், பெய்யுமழை முகிலைப்பேணுவ ரால்-வையத், திருள்பொழியுங் குற்றம் பலவெனினும் யார்க்கும், பொருள் பொழிவார் மேற்றேபுகழ்.'' எனவரும். சிலேடையின் முடித்தலாவது:— முன்னர்வைத்த பொருளையும் பின்னதனையு மொருசொற்றொடர்பாற் சொல்லுவது.(வ-று.)''எற்றே கொடிமுல்லை தன்னைவளர்த் தெடுத்த, முற்றிழை யாள் வாட முறுவலிக்கு-முற்று, முடியாப் பரவைமுழங்குலத் தேதன்றுங், கொடியார்க்கு முண்டோ குணம்.'' என வரும். கூடாவியற்கையாவது:— கூடாததனைக் கூடுவதாகக் கூறுவது,(வ-று.)''ஆர வடமு மதிசெந் சந்தனமு, மீர நிலவு மெரிவிரியும் - பாரிற், றுதிவகையான் மேம்பட்ட துப்புரவுந் தத்தம், விதிவகையான் வேறு படும்.''எனவரும். கூடுமியற்கையாவது:—கூடு மதனைக் கூடுவதாகக்கூறுவது. (வ-று.) ''பொய்யுணாயா நண்பா புனைதேர் நெறிநோக்கிக், கைவளைசோர்ந் தாவி கரைகுவார்-மெய்வெதும்பப், பூந்தையுஞ் செங்காந்தள் பொங்கொலிநீர் ஞாலத்துத், தீத்தகையார்க் கீதோ செயல்.'' எனவரும். இருமையியற்கையாவது:—கூடாததனையுங் கூட்டுவ ததனையுங் கூடுவதாகக்கூறுவது. (வ-று.) ''கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக் குரைகடலுங், கூவித் தமியோரைக் கொல்லுமாற்-பாவாய், பெரியோரும் பேணுது செய்வரோ போலுஞ், சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு.'' என வரும். விபரீதமாவது:—விபரீதப்படச் சொல்லுவது. (வ-று.) ''தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக், கொலைபுரிந்தான் குற்றங்கடிந்தா - னுலகிற், றனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவ ரேற்றப்பா, வினையும் விபரீதமாம். என வரும். எ-று. (கஎ)

**343.** வேற்றுமை யென்ப முன்னுற்றிய விருபொருள்
சாற்றிய வுவமையில் வேற்றுமைப் படுத்தலே.

(இ-ள்.) வேற்றுமை யலங்காரமாமாறுணர்த்துதும். இருபொருளைத் தம்முள் ளுவமித்துப் பின்னரவற்றுள் வேற்றுமை தோன்றக் கூறுதல் வேற்றுமை யலங்கார மெனப்படும். ஆகையி லிதுவுமுவமை விகற்பத்து ளடங்கும். (வ-று.) ''மீனணியும் பாற்கதிரும் வெண்மதிக்கு மம்மதியைத், தானணியு நாய்க்குஞ் சரல்பூண்டு-வானணியுந், திங்கட் குண்டல்லா தோர் தேய்வு மிருண்மறுவு, மெங்கட்குண் டாளரசாட் கில்.'' எ-ம். அன்றியும்.— தண்டி யலங்காரம்.—''கூற்றினுங் குறிப்பினு மொப்புடை யிருபொருள், வேற்றுமை படவரின் வேற்றுமை யதுவே.'' என்றாராதலின். (வ-று.) ''அனைத்துலகுஞ் சூழ்போ யரும்பொருள் கைக்கொண், டினைத்தளவைத் தோற்ற கரிதாம்-பனிக்கடன், மன்னவனின் சேனைபோன் மற்றதுநீர் வடிவிற், றென்னுமிது வன்றே வேறு.'' எ-து. ஒருபொருள். ''சென்று செவி யளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுளே, நின்றளவி யின்பநிறை பவற்று-ளொன்று, மணலிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று, மணலிவருங் கூந்தறன் வாக்கு.''எ-து.இருபொருள்.''மலிதோரான் கச்சியு மாகடலுந் தம்மு,

ளொலியும் பெருமையு மொக்கு-மலிதேரான், கச்சி படுவ கடல்படா கச்சி, கடல்படுவ தெல்லாம் படும்." எ-து. கூற்று. "கார்க்குலமும் பாய்திரையுங் காட்டுங் கடல்படையும், போர்க்களிறும் பாய்மாவும் பொங்குமா-லேற்ற, கலமுடைத்து முந்நீர் கதிராழித் திண்டேரார்,பலவுடைத்து வேந்தன்படை." எ-து. சமம். "பதுமங் களிக்கு மளியுடைத்துப் பாவை, வதன மதர்நோக் குடைத்துப்-புதையிருள்சூ, ழப்போ தியல்பழியு மம்போருகம் வதன, மெப் போது நீங்கா தியல்பு." எ-து. உயர்ச்சி. இவை குறிப்பு. அன்றியும்,

அவ்வேற்றுமை யலங்காரம் பிறவலங்காரங்க ளோடும் வருமாறு.— தண்டியலங்காரம்.—"அதுவே, குணம்பொருள் சாதி தொழிலொடு புணரும்." என்றாராகலின். (வ-று.) "சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமானுங், கொற்றப் போர்க்கிள்ளியுங் கோளொவ்வார் - பொற்றொடி, யாழி யுடையான் மகன்மாரன் மாயனே, கோழி யுடையான் மகன்." எ-து. குணவேற்றுமை. "ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி, யேங்கொலிநீர் ஞாலத்திரு ளகற்று-மாங்கவற்றுண், மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது, தன்னே ரில்லாத் தமிழ்." எ-து. பொருள் வேற்றுமை. "வெங்கதிர்க்குஞ் செந்தீ விரிசுடர்க்கு நீங்காது, பொங்குமதி யொளிக்கும் போகாது - தங்கும், வளமையான் வந்தநெறி மயக்க மாந்தர்க், கிளமையான் வந்த விருள்." எ-து. சாதி வேற்றுமை. "புனனாடர் கோமானும் பூந்துழாய் மாலும், வினைவகையான் வேறு படுவர் - புனனாட, னேற் றெரிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவனு, மேற்றிரந்து கொண்டமையா லின்று." எ-து. தொழில் வேற்றுமை. எ-று. (௧௨)

**344.** ஒட்டெனத் தன்பொரு ளுரையா துவமை
சுட்டலி லப்பொரு டோன்ற வியம்பலே.

(இ-ள்.) ஒட்டலங்காரமாமாறுணர்த்துதும். தான் கருதிய பொருளை வெளிப்படுத்துதற் கதனைச் சொல்லாததற்குத்தக்க மற்றொருவமைப் பொருளைச் சொல்வதே யொட்டலங்கார மெனப்படும். ஆகையிலிதுவு முவமை விகற்பத்து ளடங்கும். (வ-று.) "ஒண்ணிலவு நீர்மைத்தா யோயாப் பயஞ்சுரந்து, தண்ணளி தாங்கு மலர்முகத்துக்-கண்ணெகிழ்ந்து,நீங்க வரிய நிழலுடைத்தாய் நின்றெமக்கே, யோங்கியதோர் சோலை யுடைத்து." எ-து. இதனுட் டன்னையாதரிக்கும் வள்ளலைக்கருதி யவனையொழித் தவட்கேற்ற வுவமைப் பொருளைக் கூறியவாறு காண்க. அன்றியும். "பனிமதுப்பதுமம்-ஊழியுமரிதே" யென்று, 216-ம். சூத்திரத்தில் வந்த வகவலி லொட்டலங்காரமாகத் திருக்காவலூர் நாயகி வெளிப்படா தொழித் தவட் கேற்ற வுவமைப் பொருளைக் கூறியவாறு காண்க. அன்றியும்,

அவ்வலங்காரவிரிவுவருமாறு:—தண்டியலங்காரம்.—"அடையும் பொருளு மயல்பட மொழிதலு, மடைபொது வாக்கியாங்கன மொழிதலும், விர

வத்தொடுத்தலும் விபரீதப் படுத்தலு,மெனநால் வகையினு மியலுமென்ப.'' என்றாராகலின். (வ-று.) "வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிற், [illegible] குறுகு-நிறைமதுச்சேர்ந், துண்டாடுந் தன்முகத் [illegible] பிரிந்த வண்டு.'' எ-து. அடையும் [illegible] ழிர்த்து. "ஒண்ணிலவு நீர்மைத்தா"யென்ற செய்யுள் [illegible] றுபட்டது. "தண்ணளிசேர்ந் தின்சொன் [illegible] மெய்ப்பொருளு மெந்நாளு - மண்ணுல [illegible], யந்து நமக்களித்து [illegible] முகிலொன்று, தந்ததான் முன்னைத் தவம்.'' எ-து. அடைவிரவப் பொருள வேறுபட்டது. "கடைகோ லுலகியற்கை காலத்தின் றீங்கா, லடைய வறிதாயிற் றன்றே - யடைவோர்க், கருமை யுடைத்தன்றி யந்தேன் சுவைத்தாய்க், கருமை விரவாக் கடல்.'' எ-து. விரவத்தொடுத்தல். பிறவுமன்ன. எ-று. (கக)

**345.** அவநுதி யென்ப வாய்மெய் மறுத்துமற்
றிவறிய வொன்றனை யேற்றி யியம்பலே
யுருவகங் கூட்டி னொண்சிறப் பாகும்.

(இ-ள்.) அவநுதியலங்காரமாமாறுணர்த்துதும். எடுத்தபொருள் மிகத்தோன்ற வதற்குள்ள சிறப்பியல்குண முதலா யவற்றினுண்மை மறுத்தெதிர்மறையாக மற்றொன்றனை யுரைப்ப தவநுதியலங்கார மெனப்படும். தண்டியலங்காரம்.—"சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை,மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்.'' என்றார். (வ-று.) "நறைகமழ் தார் வொட்டார் நலனளித்த நாளு, நிறையு நிலைதளரா நீர்மை - யறநெறிசூழ், செங்கோல னல்லன் கொடுங்கோலன் றெவ்வடுபோர், வெங்கோப மால் யானை வேந்து.'' எ-து. சிறப்பவநுதி. "நிலனும் விசும்பா நிமிர்காலாந் தீயா, மலர்கதிராம் வானு மதியா-மலர்கொன்றை, யொண்ணறுந் தாரா னொருவ னுயிர்க் குயிரா, யெண்ணிறந்தா னெப்பொருளு மாம்.'' எ-து. பொருளவநுதி. "மனுப்புவிமேல்வாழ மறைவளர்க்கு மார்ப, பனித்தொடையற் பார்த்திவர்கோ னெங்கோன்-றனிக்கவிகை, தண்மைகிழற் றன்று தற்றொழுத பேதையர்க்கு, வெண்மை கிழற்றவி விடும்.'' எ-து. குணவவநுதி. அன்றியும், இதனோ டுருவகங் கூட்டிற் சிறப்பாம். (வ-று.) "பொங்களக மல்ல புயலே யிவையிவையுங், கொங்கை யிணையல்ல கோங்கரும்பு - மங்கைநின், மையரிக் கண்ணல்ல மதர்வண் டிவை யிவையுங், கையல்ல காந்தண் மலர்.'' எ-து. வண்டல்ல கருங்கண்ணென் றுவமை மறுப்ப துண்மை யுவமை யெனவும், கண்ணல்ல வண்டென்று பொருளைமறுப்ப தவநுதி யுருவக மெனவுங் கண்டு கொள்க. எ-று. (உ0)

**346.** ஊகாஞ் சிதமென்ப வுரிமை யொழித்துமற்
றோகோர் குறிப்பொரு ளறைந்து பொருத்தலே.

(இ-ள்.) ஊகாஞ்சித வலங்காரமாமாறுணர்த்துதும். எடுத்த பொருட்கண் ணியல்பாயின வற்றைக் கூறினு மவற்றிற்குரிய காரணத்தையொழித்து மற்றொன்றன் சிறப்புத் தோன்றக் கவி தான் கருதிய மற்றொரு காரணத்தைக் கூறுவது ஊகாஞ்சித மெனப்படும். இதனைத் தற்குறிப்பேற்ற மென்பாரு முளர். என்னை. ஊகாஞ்சித மெனினுந் தற்குறிப் பெனினு மொக்கும். அஞ்சித மெனினும் பொருத்த மெனினு மொக்கும். (வ-று) "மண்படிதோட் கிள்ளி மதயானை மாற்றரசர், வெண்குடைக்கே வைத்த வெகுளியான் - விண்படர்ந்து, பாயுங்கொ லென்று பனிமதியம் போல்வதூஉந், தேயுந் தெளிவிசும்பி னின்று." எ-து. பெயர் பொருள். "வேனில் வெயிற்குலர்ந்த மெய்வெறுமை கண்டிரங்கி, வானில் வளஞ்சுரந்த வண்புயற்குத் - தானுடைய, தாதுமே தக்க மதுவந் தடஞ்சினையாற், போதுமீ தேத்தும் பொழில்." எ-து. அல்பொருள்.—தண்டியலங்காரம்.—"பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினு, மியல்பின் விளைத்திற னன்றி யயலொன்று, தான்குறித் தேற்றுத றற்குறிப் பேற்றம்." இது மேற்கோள். எ-று. (உக)

**347.** நுட்பமாந் தெளிவுற நுவலாத வற்றையு
முட்படுத் திடுங்குறிப் புரையரி துணர்த்தலே.

(இ-ள்.) நுட்பவலங்காரமாமாறுணர்த்துதும். எடுத்த பொருளை வெளிப்படக் கூறாததுவே தோன்ற வுவமை யாலாயினு முன்பின் வருவதைக் கொண்டாயினு மதனைக் காட்டுங் குறிப்பினை யுரைப்பது நுட்பமெனப்படும். (வ-று.) வெண்பா.—"வற்றிய நீர்ப்பொய்கை மலர்கண் டறிந்தனுகப், பற்றியமாண் பற்றிலர்தம் பாலுறவே - மற்றுவரி, சேர்ந்தகல வெய்யோன் செழும்பொய்கைத் தாமரைகண், டோர்ந்தகல்க நீச ருறவு." என்பதிதனுட் சான்றோ ருறவு துன்பம் வரினு மென்நாளு மாறாதெனவு நீசருறவு நில்லா தொரு பொழு தெல்லையுண் மாறு மெனவுங் குறிப்பிற் காட்டியவாறு காண்க. "பாடல் பயிலும் பணிமொழிதன் பணைத்தோள், கூடலவாவிற் குறிப் புணர்த்து-மாடவர்க்கு, மென்றீந்தொடை யாழின் மெல்லவே தைவந்தா, ளின்றீங் குறிஞ்சி யிசை." எ-து. தொழில்.—தண்டியலங்காரம்.—"தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினு, மரிதுணர் வினைத்திற நுட்ப மாகும்." இது மேற்கோள். எ-று. (உஉ)

**348.** புகழ்மாற் றென்ப புகழ்வது போலிகழ்ந்
திகழ்வது போற்புகழ்ந் தியம்பிய நிலையே.

(இ-ள்.) புகழ்மாற் றலங்காரமாமாறுணர்த்துதும். ஒன்றனைப் புகழ்ந்தாற்போல வதனைப் பழித்தலும் பழித்தாற்போல வதனைப் புகழ்தலுமென விருவகையும் புகழ்மாற்றெனப்படும். (வ-று.) வெண்பா.—"உள்ளலும் பின்னுறச்சி ருய்த்திரவுதீர் மழைபெய், வள்ளலுனை யென்பார் வாழ்த்தறி

யார்-வெள்வேலோய், பொய்வல்லா ரொன்று பொதுமாதர் மார்பீயாய், மொ ய்வல்லார்க் கீயாய் முதுகு." எ-து. பழித்தாற் போலப் புகழ்ந்தது.—வெ ண்பா.—"ஏனையோர் கைப்பொருட்கொண் டேற்றல்லா துன்பொருளைத், தானிடா வென்றூர்ப்பொய் தாமுரைத்தார் - வேனெவர்க்கு, மண்டா திரவா தளவின்றி யெந்நாளு, நுண்டாதர வீவாய் நோய்." என்பது புகழ்ந்தாற் போலப் பழித்தது.—குறள்.—"எற்றிற் குரியர் கயவ ரொன் றுற்றக்கால், விற்றற் குரியர் விரைந்து." என்பதிதுவும் புகழ்ந்தாற்போலப் பழித்தது. பிறவுமன்ன.—தண்டியலங்காரம்—"பழிப்பது போலும் பான்மையின் மே ன்மை, புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி". இது மேற்கோள். எ-று.

**349.** தன்மேம் பாட்டுரை தான்றற் புகழ்தலே.

(இ-ள்.) தன் மேம்பாட்டுரை யலங்காரமாமாறுணர்த்துதும். ஒரு வன் றனக்கு மேம்பாட்டாகத் தோன்றத் தன்னைத்தானே புகழ்வது தன் மேம்பாட்டுரை யெனப்படும். (வ-று.)—வெண்பா.—"எஞ்சினு ரில்லையெ னக் கெதிரா யின்னுயிர்கொண், டஞ்சினு ரஞ்சாதுபோ யகல்க-வெஞ்சமத் துப், பேராத வராகத் தன்றிப் பிறர்முதுகிற், சாரா வென்கையிற் சரம்." எ-ம். 'யானு மென்னெஃகமுஞ் சாலு மவனுடை, யானைக்குஞ் சேனைக்கு நேர்.' எ-ம். பிறவுமன்ன.—தண்டியலங்காரம்.—"தான்றற் புகழ்வது தன் மேம் பாட்டுரை." இது மேற்கோள். எ-று. (உச)

**350.** பின்வரு நிலையே பிறழ்ந்தெனப் பலவயின்
முன்வருஞ் சொல்பொருள் பின்னும் வருவதே.

(இ-ள்.) பின்வரு நிலையலங்காரமாமாறுணர்த்துதும். மேற்சொன்ன மடக்கணிபற்றிய வொழுங்கில்லாமையு முன்னர்வந்த சொல்லாயினும் பொருளாயினும் பின்னர் பலவிடத் தவைவரிற் பின்வரு நிலையலங்கார மெனப்படும். (வ-று) வெண்பா.—" மலர்விழியே வாய்மலரோ வாய்ந்த வதன, மலரோகை கண்மலரோ வாடா-மலர்மாலை, யாரு ளிருண்மாலை யற்று ளருண்மாலை, தானுந் தனிக்கன்னித் தாய்." எ-து. சொற்பின் வருநிலையா கையின் சொல்லணியாமாயினும் பொருளானும் வழங்குமிதுவென்றமை யாலிங்கண் வைக்கப்பட்டது. அன்றியும்.—வெண்பா.—"அவிழ்ந்தன தோ ன்றி யலர்ந்தன காயா, நெகிழ்ந்தன நேர்முகை முல்லை - மகிழ்ந்திதழ், விண்டன கொன்றை விரிந்த கருவிளை, கொண்டன காந்தள் குலை." எ-து. பொருட்பின்வருநிலையலங்காரம்.—"வைகலும் வைகல் வரக் கண்டு மஃது ணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர், வைகலும் வைகற் றம் வாழ்நாண்மேல் வைகுதல், வைகலைவைத் துணரா தார்." எ-து. சொற் பொருட்பின்வருநிலை. " செங்கமல நாட்டஞ் செழுந்தாமரை வதனம், பங் கயமென் செவ்வாய்ப் பதுமம்போற்-செங்கரங்க, ளம்போருகந் தாள ரவி ந்த மாரனுர், தம்போருகந் தாடனம்." எ-து. பொருட்பின் வருநிலை. "மால் கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ், மால்வரைத்தோ ளாதரித்த மாலை

யார் - மாலிருள் கூர், மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கு, மாலை யின் வாளி மலர்.'' எ-து. சொற்பின்வருநிலை.—தண்டி யலங்காரம்.— "முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற், பின்வரு மென்னிற் பின் வரு நிலையே.'' இது மேற்கோள். எ-று. (உரு)

**351.** முன்ன விலக்கென்ப முன்னத்தின் மறுத்தலே.

(இ-ள்.) முன்னவிலக்கலங்காரமாமாறுணர்த்துதும். ஒன்றைச்சொ ல்லி மற்றதைக் காட்டிய குறிப்பினான் மறுத்துவிலக்கல் முன்னவிலக்கலங் கார மெனப்படும். (வ-று.) வெண்பா.—"இன்னுயிர்காத் தளிப்பாய் நீயே விளைவேனின், மன்னவனுங் கூற்றுவனும் வந்தக்கா-லன்னோர், தமக்கெம் மைத் தோன்று தகைமைத்தோர் வின்னை, யெமக்கின் றருள்புரிந்தே யே கு.'' என்பதிதனுளுயிர்க்காவலனைப் போகச்சொன்னாற் போலாகிக் காட்டி னகுறிப்பினாற் போதல்விலக்கினவாறு காண்க.—தேம்பாவணி.—"அலைவீ ரவூழல் வைகி யாவி னஞ்சயிர்ந் தெஞ்ஞான்றுங், கொலைவீர வூழிச்செந்தீக் குளித்தலே யின்பமாயின், வலைவீர வணியிற் பின்னி மலர்தவிழ் கூந்தல் வெஃகிப், புலைவீர வுணர்ந்த தாமப் புணரியிற் குளிப்பாய் நெஞ்சே.'' எ-ம். "பாலன்றன துருவாயேழுலகுண் டாலிலையின்,மேலன்று நீகிடந்தாய்மெய் யென்ப -ராலன்று, வேலைசூழ் நீரதோ விண்ணதோ மண்ணதோ, சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்.'' எ-து. இறந்தகாலவினை விலக்கு. "முல்லைக் கொடி நடுங்க மொய்காந்தள் கைகுலைப்ப, வெல்லையின் வண்டெழுந் திர ங்கவே-மெல்லியன் மேற், றீவாய் நெடுவாடை வந்தாற் செயலறியேன், போவா யொழிவாய் பொருட்கு.'' எ-து. எதிர்காலவினை விலக்கு. "மாதர் நுழை நுசுப்பு நோவ மணிக்குழைசேர், காதின் மிசை நீலங் கைபுனைவீ- மீதுலவு, நீணீல வாட்க ணிமிர்கடையே செய்யாவோ, நாணீலஞ் செய்யு நலம்.'' எ-து. நிகழ்கால வினை விலக்கு. அன்றியும்,

அவ்வலங்கார வேறுபாடு வருமாறு:—தண்டியலங்காரம்.—"பொரு ள்குணங் காரணங் காரியம் புணரும்.'' என்றாராகலின். (வ-று.) "கண்ணு மனமுங் கவர்ந்தவ ளாடிடமென், றண்ண லருளு மடையாளங் - தண்ணி மூலின், சுற்றெல்லை கொண்டுலவுஞ் சோதித் திரளல்லான், மற்றில்லைகா ணும் வடிவு.'' எ-து. பொருள் விலக்கு. "மாதர் துவரிதழ்வாய் வந்தென் னுயிர் கவருஞ், சீத முறுவ லறிவழிக்கு-மீதுலவு, நீண்ட மதர்விழியு நெஞ் சங்கிழித் துலவும், யாண்டையதோ மென்மை யவர்க்கு.'' எ-து. குணவில க்கு. "மதரரிக்கண் சிவப்ப வார்புருவங் கோட, வதரந் துடிப்ப வணிசேர்- நுதல் வியர்ப்ப, நின்பா னிகழ்வனகண் டஞ்சாதா லென்னெஞ்ச, மென் பாற் றவறின்மை யான்.'' எ-து. காரணவிலக்கு. "மன்னவர் சேயா மயில் கவி யாடலுறும், பொன்னலருங் கொன்றையும் பூந்தளவின்-மென்மலரு, மின்னுயிரா நீண்முகிலு மெய்யென்று கொள்வதே, யென்னுயிரோ பின்னு முளது.'' எ-து. காரியவிலக்கு. அன்றியும்,

அவ்வலங்காரவிரிவுவருமாறு:—தண்டியலங்காம்.—"வன்சொல்வாழ்த்துத் தலைமை யிகழ்ச்சி, துணைசெயன் முயற்சி பரவத முபாயங், கையறலுடன்படல் வெகுளி யிரங்க, லைய மென்றுங் கறிந்தனர் கொளலே." என்றாராகலின், வன்சொல் விலக்கென்பது வன்சொற் சொல்லிவிலக்குவது. (வ-று.) "மெய்யே பொருண்மேற் பிரிதியேல் வேறொரு, தையலை நாடத் தகு நினக்கு - நெய்யிலைவேல், வள்ளல்பிரி வற்றம்பார்த் தெங்கள் வாழ்நாளைக், கொள்ள வுழலுமாங் கூற்று. "எனவரும். வாழ்த்து விலக் கென்பது. "செல்லுநெறி யனைத்துஞ் செந்நெறி யாக, மல்கு நிதியும் வளஞ்சிறக்க - வெல்லு, மடற்றோர் விடலையகன் றுறைவதாங்கோ, ரிடத்தே பிறக்கவே யாம்." எனவரும். தலைமைவிலக்கென்பது:—தன்பாற்றலைமை தோன்றக் கூறிவிலக்குவது. (வ-று.) " பொய்மை நெறிதீர் பொருளுமிகப் பயக்கு, மெம்முயிர்க்கும் யாது மிடரில்லை-வெம்மைதீர், தேக வினியநெறி யணிய வென்றாலும்,போக லொழிதி பொருட்கு." எனவரும். இகழ்ச்சி விலக்கென்பது:—எதுவிகழ்ந்து விலக்குவது. (வ-று.) "ஆசை பெரிதுடையே மாருயிர்மே லப்பொருண்மே,லாசை சிறிது மடைநிலமாற்-றேசு,வழுவா நெறியின் வருபொருண்மே லண்ண, லெழுவா யொழிவா யினி." எனவரும். துணைசெயல் விலக்கென்பது:—துணை செய்வார்போலக் கூறிவிலக்குவது. (வ-று.) "வினைபொருண்மே லண்ணல் விரும்பினையே லின்றெங், கிளையழுகை கேட்பதற்கு முன்னே - விளைதேன், புடையூறு பூந்தார்ப் பொலங்கழலோய் போக்கிற், கிடையூறு தோன்றாமு னேகு." என வரும். முயற்சி விலக் கென்பது:—முயற்சி தோன்றக் கூறி விலக்குவது. (வ-று.) "மல்லணிந்த தோளா யிதென்கொலோ வான்பொருண்மேற், செல்கவினாந் தென்றனுளந் தெளிந்து - சொல்லுதற்கே, யென்று முயல்வல்யா னேகணீ யென்றிடையே, தொன்றுகின்ற தென்வாயிற் சொல்." எனவரும். பரவச விலக்கென்பது:—தன்வசமல்லாமை கூறி விலக்குவது. (வ-று.) "செல்கை திருவுளமேல் யானறியேன் றேங்கமழ்தார், மல்லகலந் தங்கு மதர்விழியின்-மெல்லிமைகண், ணொக்கம் விலக்குமென நோமிவள் காதல், போக்கியகல்வாய் பொருட்கு" என வரும். உபாய விலக்கென்பது:—விலக்குமதனை யுபாயங் காரணமாக விலக்குவது. (வ-று.) "இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே யினிவேனின், மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தாலன்னோர், தமக்கெம்மைத் தோன்றா தகைமைத்தோர் விஞ்சை,யெமக்கின்றருள்புரிந்தே யேகு." எனவரும். கையறல் விலக்கென்பது:—வேண்டிய பொருண்மேன் முயலு மொழுக்க மின்மை தோன்றக் கூறுவது. (வ-று.) "வாய்த்தபொருள் விளைத்த தொன்றில்லை மாதவமே, யார்த்த வறிவில்லையம்பலத்தே-கூத்துடையான், சில மறிந்தேயுஞ் சிந்தியேன் சென்றொழிந்த, காலம் வறிதே கழித்து." எனவரும். உடம்படல்விலக்கென்பது:—உடம்பட்டாரைப்போல விலக்கிக்கூறுவது. (வ-று.) " அப்போ தடுப்ப தறியே னருள்செய்ய, விப்போ திவளு மிசைக்கின்றா-டப்பில், பொருளோ புகழோ

தரப்போ வாமாலை, யிருளோ நிலவோ வெழும்." எனவரும். வெகுளிவிலக் கென்பது:—வெகுளிதோன்றக் கூறிவிலக்குவது. (வ-று.) "வண்ணங் கருக வலைசரிய வாய்புலர,வெண்ணந் தளர வெதிர்நின்று-கண்ணின்றிப், போதல் புரிந்து பொருள்காதல் செய்வீரால், யாதும் பயமிலேம் யாம்." என வரும். இரங்கல் விலக்கென்பது:—இரங்க லேன்றக் கூறி விலக்குவது. (வ-று.) "ஊச லொழிவிழக்கு மொப்புமயிலிழக்கும்,வாசஞ் சுனையிழக்கும் வள்ளலே-தேசு, பொழிலிழக்கு நாளையெம் பூங்குழல் விட்டேகி, லெழிலிழக்கு மந் தோ விதண்." எனவரும். ஐயவிலக்கென்பது:—ஐயுற்றதனை விலக்குவது. (வ-று.) "மின்னோ பொழிலின் விளையாடு மிவ்வுருவம், பொன்னோ வெனு ஞ்சுணங்கிற் பொற்கொடியோ-வென்னோ, திசையுலவுங் கண்ணுந் திரண் முலையுந் தோளு, மிசையிருளுந் தாங்குமோ மின்." எனவரும். எ-று. (உசு)

**352.** சொல்விலக் கொன்றனைச் சொல்லிய பின்னஃ
தல்லெனை மறுத்தல்போ லதுமிக விளக்கலே.

(இ-ள்.) சொல்விலக்கலங்காரமாமாறுணர்த்துதும். புகழினு மிகழி னுந் தானே யுரைத்தசொல் லாராயா துரைத்தன்மறுத்து மற்றதின்மிக்க பிறிதொன் றுரைப்பது சொல்விலக் கலங்கார மெனப்படும். (வ-று.)—வெ ண்பா.—" தானைவேந் தென்பான்றன் றனமா யொன்றீயான், யானென் றன் றீயா னவனென்றே - னேனையவர், கொள்பொருள் கொள்வான் குடியலைத்து நோயீவான், றெள்பொரு டேற்றுச் சினத்து." எ-ம்.—விருத் தம்.—"பண்முலை சுரந்த கீதப் பாலொடு வளர்த்தேன் காமன், பெண்மொ ழி தவறிற் றன்றோ பெரிதுடன் றுயிரை யுண்ட, திண்மனக் கொடிய கூற் றன் சிறையநான் வளர்த்தேன் பட்ட, புண்மனத் தழுந்தி யாற்றுப் புலம்பு வே னுளுமென்றான்." எ-ம். பிறவுமன்ன. எ-று. (உஎ)

**353.** இலேசமே கருத்தொளித் திடவதைக் காட்டுஞ்
சத்துவம் பிறிதிற் சாற்றி மறைத்தலே.

(இ-ள்.) இலேசவலங்காரமாமாறுணர்த்துதும். மனத்திற் கருதிய வற்றை வெளிப்படுக்கும் புறத்தடையாளங்கள் பிறிதொன்றால் வந்தன வாகக்கூறித் தன்கருத்தினை மறைப்ப திலேச மெனப்படும். (வ-று.)—வெ ண்பா.—"மதுப்பொழிதார் மன்னவனை மால்கரிமேற் கண்டு, விதுப்பு மயிர ரும்பு மெய்யும் - புதைத்தாள், வளர்வா ரணநெடுங்கை வண்டுவலை வாய்த் த, விளைவாடை வந்ததே னின்று." எ-ம். மனவேட்டையா லாயது மறைத்தவாறு காண்க. அங்ஙனம், புகழ்வதுபோலப் பழித்தலும் பழிப் பதுபோலப் புகழ்தலு மிலேச மென்மனுர் சிலரோ.—தண்டியலங்காரம்.— "குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின், மறைத்துரை யாட லிலேச மாகும்." இது மேற்கோள்.

அவ்விலேசத்தின் பாற்படுஞ் சிலவலங்காரங்கள் வருமாறு:—தண்டி யலங்காரம்.—"புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்,பழிப்பது போலப்

புகழ்புலப் படுதலு, மவையு மன்னவென் றறைந்தன ருளரே." என்றுராக வின். (வ-று.) "மேய கலவி விளைபோழ்து மெல்லென்னுஞ், சாய றளராமற் றூங்குமாற் - சேயிழையாய், போர்வேட்ட மேன்மைப் புகழாளன் யான் விரும்புந், தார்வேட்ட தோள்விடலை தான்." இது புகழ்வதுபோலப் பழித்தது.—"ஆடன் மயிலியலி யன்பனணி யாகங், கூடுங்கால் மெல்லென் குறியறியா-றூட, விளிவந்த செய்கை யீர்வாளன் யாண்டும், விளிவந்த வேட்கை யிலன்." இது பழிப்பதுபோலப் புகழ்ந்தது. எ-று. (உஅ)

**354.** சுவையணி யென்ப சுடுஞ்சினங் காமம்
வியப்பு வலமிழிவச் சம்வீர நகையென
வெண்மெய்ப் பாட்டி னியைவன கூறி
யுண்மெய்ப் பாட்டை யுணர்த்தித் தோற்றலே.

(இ-ள்.) சுவையலங்காரமாமாறுணர்த்துதும். நெஞ்சங் கடுத்த வற்றைக்காட்டும் புறக்குறி விரித்துக் கூறல் சுவை யலங்கார மெனப்படும். அவையே சினமுதலாக நகையீறுகவைத்த வெண்மெய்ப்பாட்டெனக் கொள்க. அவற்றிற்கு வடமொழி நூலார் சாந்தங்கூட்டி யிவ்வலங்காரத்தை நவரசபாவ மென்மனு வொன்றுணர்க. அன்றியுஞ் சினமெனினு முருத்திர மெனினுமொக்கும். (வ-று.) "கைபிசையா வாய்மடியா கண்சிவவா வெய்துயிரா, மெய்குலையா வேறுய் வெகுண்டெழுந்தான் - வெய்யபோர்த், தார்வேய்ந்த தோளான் மகளைத் தருகென்று, போர்வேந்தன் றூதிசைத்த போது." இது சினம். "திங்களுநுதல் வெயர்க்கும் வாய்துடிக்குங் கண்சிவக்கு, மங்கைத்தளிர் நடுங்குஞ் சொல்லலையும் - கொங்கைப், பொருகாலு மூடிப் புடைபெயருங்காலு, மிருகாலு மொக்கு மிவட்கு.' இது காமம். "முத்தரும்பிச் செம்பொன் முறித்தைந்து பைந்துகிரின், கொத்தலர்ந்து பல்கலனுஞ் சூழ்ந்தொளிருங் - கொத்தினதாம், பொன்னேர் மணிகொழிக்கும் பூங்கா விரிநாடன், றன்னேர் மொழியுந் தரு." இது வியப்பு. "கழல்சேர்ந்த கால்விடலை காதலிமீ தீண்டு, மழல்சேர்ந்து தன்னெஞ் சயர்ந்தான்-குழல்சேர்ந்த, தாமந் தரியா தசையுந் தளிர்மேனி, யீமம் பொறுக்குமோ வென்று." இது அவலம். "முடைதலையு மூளையு மூன்றடியு மென்புங், குடருங் கொழுங்குருதியும் மீர்ப்ப-மிடைபெய், பெருநடஞ்செய் பெர்றிச்சே கொற்றப் போர்களின்னி, கருடனைச் சீறுங் களம்." இது இழிவு "கைக்கெரித்து வெய்துயிர்த்துக் காறளர்ந்து மெய்பனிப்ப, மையரிக்கண் ணீர்ததும்ப வாய்புலர்ந்தா - டையல், சினவேல் விடலையாற் கையிழந்த செங்கட், புனவேழ மேல்வந்த போது." இது அச்சம். "சேர்ந்த புறவி னிறைதன் றிருமேனி, யீர்ந்திட் டுயர்துலைதா னேறினு-னேர்ந்த, கொடைவீர மோமென் னிறைகுறையா வன்கட், படைவீர மோசென்னி பண்பு." இது வீரம். "நாண் போலுந் தம்மனைக்குத் தான்சேற லென்னின்ற, பாண்போலும் வெவ்வழலிற் பாய்வதூஉங்-காண்டோழி, கைத்தலங்கண் ணுகக் கனவுகாண் பாநொருவன், பொய்த்தலைமுன் னீட்டி யற்று." இது நகை. எ-று. (உகூ)

**355.** உதாத்தம் பொருளிற் பதார்த்த மிகலே.

(இ-ள்.) உதாத்த வலங்கார மாமாறுணர்த்துதும். கேட்போர் வியப்புறத்தன் பொருட்டன்மையின் மேலுஞ் சொற்பயன் மிக்கக் கடந்துரைப்ப துதாத்த வலங்கார மெனப்படும். (வ-று.) "முன்னி னூறொலாம் பின்னுறக் காதலினு முடுகி.' எ-ம். 'பேதைநொந் தழுதகண்ணீர் பெருங்கடல்வெள்ளமாற்று.' எ-ம். 'வச்சிர மலையினு மனத்தி னுண்மையான்.' எ-ம். வரும். அன்றியும், "கன்றும் வயவேந்தர் செல்வம் பலகவர்ந்து, மென்றும் வறியோரிடர் கவர்ந்து - மொன்று, மறிவரிதாய் நிற்கு மளவினதா லந்தோ, செறிகதிர்வேற் சென்னி திரு." இது செல்வமிகுதி. "மண்ணன்று தன்கிளையி னீங்கி வனம்புகுந்து, பண்ணுந் தவத்தியைந்த பாத்தனு - மெண்ணிறந்த, மீதண்டர் கோன்குலையும் வெவ்வசுரர் வேரறுத்தான், கோதண்டமே துணையாய்க் கொண்டு." இது உள்ளமிகுதி.—தண்டி யலங்காரம்.—"வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமு, முயற்சிபுனைந் துரைப்ப துதாத்த மாகும்." இது மேற்கோள். எ-று. (௬0)

**356.** ஒப்புமைக் கூட்ட மொத்த குணத்தவை
செப்பித் தன்பொரு டெளிவுறக் கூறலே.

(இ-ள்.) ஒப்புமைக் கூட்ட வலங்கார மாமாறுணர்த்துதும். எடுத்த பொருளை விளக்கவதற்கேற்ற நற்குணத்தானுந் தீக்குணத்தானு மொத்தபலவற்றைக் கூட்டி யொருப்படக் கூறுவ தொப்புமைக் கூட்ட மெனப்படும். (வ-று.) தர்கடுகம்.—வெண்பா.—"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனு, முள்பொருள் சொல்லாச் சலமொழி - மாந்தரு, மில்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர், வல்லே மழைவிலக்குங் கோள்." எ-து. தீயகுண வொப்புமைக் கூட்டம்.—காசிகாண்டம்.—"வேத மோதிய வேதியர்க் கோர்மழை, நீதி மன்னர் நெறிதனக் கோர்மழை, காதன் மங்கையர் கற்பினுக் கோர்மழை, மாத மூன்று மழையெனப் பெய்யுமே." எ-து. நற்குண வொப்புமைக் கூட்டம். இருமொழி மாலை.—வெண்பா.—"ஒதல் சடைநீட்ட லூண்மறுத்த னீராடல், கோதுளத்துக் கொண்டக்கா லின்றேதேயேதின், மனத்தூய்மை கையீகை வாய்வாய்மை மூன்றுந், தவத்தூய்மை சாரி னினிது." என்பதிருகுண ஒப்புமைக் கூட்டம் பிறவுமன்ன.—தண்டியலங்காரம்.—"கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத், தொருபொருள் வைப்ப தொப்புமைக் கூட்டம்." இது மேற்கோள். அன்றியும்,

அவ்வலங்கார விரிவு வருமாறு:—தண்டி யலங்காரம்.— "புகழினும் பழிப்பினும் புலப்படு மதுவே." என்றாராகலின், (வ-று.) "பூண்டாங்கு கொங்கைப்போர் வெற்குழை பொருப்புந், தூண்டாத தெய்வச் சுடர்விளக்கு - நாண்டாங்கும், வண்மைசால் சான்றவருங் காஞ்சி வளம்பதியு, முண்மையா னுண்டிவ் வுலகு." இது புகழ். "கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனு, முள்பொருள் சொல்லாச் சலமொழி - மாந்தரு,

மில்லிருக் தெல்லே கடப்பாரு மிம்மூவர், வல்லே மழைவிலக்குங் கோள்." இது பழிப்பு. எ-று. (௬௧)

**357.** ஒப்புமை யேற்ற மொன்றற்கொள் றுமிகச்
செப்பிய பலவின்மேற் செய்பொரு ளேற்றலே.

(இ-ள்.) ஒப்புமை யேற்ற வலங்காரமாமா றுணர்த்துதும். வைத்த பலவடி யேறினாற் போல நற்குணத்தானுந் தீக்குணத்தானு மொன்றற்கொன்று மிக்கதாகப் பலவற்றைக்கூறி யெல்லாவற்றினு மேற் றானெடுத்த பொருளே நிற்பதாகக் கூறுவ தொப்புமை யேற்ற மெனப்படும். ஆகையிற் செய்த வுருவ முயர்ந்த குறட்டி லேற்றிக் காட்டினாற் போல வாகு மென்றறிக. (வ-று.)—வெண்பா.—" பயனில் சொல்லின்னா மிக்கின்னா மெய்ப்பாட்டி, னயனில்சொன் னன்றுடா தன்னே - வியந்தனசொல், லாங்கின்னா பின்னின்றே யம்புற்சொல் லம்மூன்றி, னூங்கின்னா வாழு முயிர்க்கு." பிறவுமன்ன. எ-று. (௬௨)

**358.** விபாவனை யென்ப விளங்கிய வுலக
சுபாவனை யலத்திறந் தோற்றி யியம்பலே.

(இ-ள்.) விபாவனை யலங்காரமாமாறுணர்த்துதும். உலகினி லொழுக்கத்தேற்ற காரணமொழிய நீக்கி யியல்பினானுங் குறிப்பினானும் பிறிதொரு காரணந் தோன்ற வுரைப்பது விபாவனை யெனப்படும். என்னே, விபாவனை யெனினு மொழுக்கவின்மை யெனினு மொக்கும். (வ-று.) "பூட்டாத விற்குனித்துப் பொங்குமுகி லெங்குந், தீட்டாத வம்பு சிதறுமால்."—தேம்பாவணி.—"பாயா வேங்கை யையென்புழிப் பைம்பூ, வீயாப் புண்டரீக மெனவெண்ண, லாயாப் பேதைமையாம் பகைகொ, லோயாக் கோல்வழு வோகட னென்றான்." எ-ம். "தீயின்றிவேந் தமியோர் சிந்தை செழுந்தென்றல், வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும்-வாயிலா, தொன்றிச்சிலருட னீர்ந்தாரமின்றிக், கன்றிச் சிலைவளைத்த கார்." எ-து. காரண விபாவனை. "கடையாமே கூர்த்த கருநெடுங்கண் டேடிப், படையாமே போந்தன பாவாய்-கடைஞெமியக், கோட்டாமே கோடும்புருவங் குலிகச்செப், பாட்டாமே சேந்த வடி." எ-து. இயல்புவிபாவனை. "பூட்டாத விற்குனித்துப் பொங்கு முகி லெங்குந், தீட்டாத வம்பு சிதறுமா - லாட்டமாய்க், காணாத கண்பரப்புந் தோகை கடும்பழிக்கு, நாணாத யாத்தார் நமர்." எ-து. வினையெதிர்மறுத்துப் பொருள் புலப்படுத்த விபாவனை. "காரண மின்றி மலையா னிலங்கனலு, மீரமதி வெதும்ப லென்னிமித்தங் - காரிகையார்க், கியாமே தளரவியல்பாக நீண்டனகண், டாமே திரண்ட தனம்." எ-து. பொதுவகையாற் காரணம் விலக்கிக் காரியம் புலப்படுத்த விபாவனை. "பாயாத வேங்கை மலரப் படுமதமாப், பூவாத புண்டரிக மென்றெண்ணி-மேவும், பிடிதழுவி மாறதிருங் கானிற் பிழையால், வடிதழுவு வேலோன் வரவு." எ-து. வேறுபாட்டு விபாவனை.—தண்டி யலங்காரம்.—"உலகறி காரண மொழித்

தோன் றுரைப்புழி, வேறொரு காரண மியல்பு குறிப்பின், வெளிப்பட வு ரைப்பது விபாவனை யாகும்." இது மேற்கோள். எ-று. (கூஙு)

**359.** விசேட மெனக்குறை விளம்பி யவற்றான்
மேன்மை படப்பொருள் விளக்கிய நெறியே.

(இ-ள்.) விசேட வலங்காரமாமாறுணர்த்துதும். எடுத்த பொருட் குக் குணத்தானுந் தொழிலானும் பொருளானு முறுப்பினானுங் குறைபா டுள்ளதாகக் காட்டி யக்குறை காரணமாக வதற்கு மேன்மை தோன்ற வுரைப்பது விசேட மெனப்படும். (வ-று.) வெண்பா.—"யானை யிரதம் பரியா ளிவையில்லைத், தானு மனங்கன் றனுக்கரும்புந் - தேனார், மலரு மம்பாயினு மார னமர்செய், துலகு கைக்கொண்டா னொருங்கு." எனப் பொருட் குறையு முறுப்புக் குறையுஞ் சொல்லி மேம்பாட்டுரைத்த வாறு காண்க. பிறவுமன்ன. எ-று. (கூச)

**360.** விரோத மென்ப விகற்ப முரண்படு
மன்னிய சொற்பொரு ளுன்னிய மாக்கலே.

(இ-ள்.) விரோத வலங்காரமாமாறுணர்த்துதும். மாறுபட்ட சொ ல்லும் பொருளு மொன்று பட்டியலும்படி வைத்துரைப்பது விரோதவல ங்கார மெனப்படும். இதுவே செய்யுளிலக்கணத்துண் முரண்டொடை யெ ன்று வழங்கு மென்றுணர்க. (வ-று.) "உருவில்லா னுருவாகி யுலகிலொரு மகனுதிப்பக், கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தா யாயினையே." எ-ம். வெண்பா.—"தந்தையை யீன்றதாய் தான்றாயுங் கன்னியுமாய், வந்தியை யுங் காவலனார் வந்தேத்திச்-சிந்தையெழக், காலையு மாலையுங் கைகூப்பிக் கா ணுழுதான், மேலை வினையெல்லாங் கீழ்." எ-ம். "சோலை பயிலுங் குயின் மழலை சோர்ந்தடங்க, வாலு மயிற்கணங்க ளார்த்தெழுந்த-ஞாலங், குளிர்ந் த முகில்கறுத்த கோபஞ் சிவந்த, விளர்ந்த துணைப்பிரிந்தார் மெய்." எ-ம். "காலையு மாலையுங் கைகூப்பிக் காணுழுதான், மேலை வினையெல்லாங் கீழ வாங்-கோலக், கருமான்றோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைந்தார்ப், பெருமானைச் சிற்றம் பலத்து." எ-ம். வரும். "இனமா னிகல வெளியவே யென்னும், வனமேவு புண்டரிகம் வாட்டும்-வனமார், கரியுருவங் கொண்டு மரிசிதறக் காயும், விரிமலர்மென் கூந்தல் விழி." இது சிலேடை விரோதம். தண்டியலங்காரம்.—"மாறுபடு சொற்பொருண் மாறுபாட் டியற்கை, விளை வுதர வுரைப்பது விரோத மாகும்." இது மேற்கோள். எ-று. (கூரு)

**361.** பிறிதுரை யணியே பெருந்துயர் முதற்காட்ட
முன்னிலை யாரொடு மொழிதலொழித்துப்
பன்னிலை யாரொடு பகர்த லென்ப.

(இ-ள்.) பிறிதுரை யலங்கார மாமாறுணர்த்துதும். ஒருவரை முன் னிலையாகப் பேசுங்காலை யவர்களை நீக்கி யகன்றவராயினு நல்லறிவில்லா

விலங்கு-பறவை-மலை-மர-முதலியவாயினு முன்னிலையாகப் பேசுவது பிறிதுரை யலங்கார மெனப்படும். (வ-று.)—விருத்தம்.—"மின்னென மிளிர்ந்து நீங்கி வீய்ந்தவான் சொல்லீர் சொன்மின், பொன்னென மலிசீர் பொன்னைப் புகழெனு வுலகிற் பன்னாட், கொன்னென்னத் தேடி வைத்தகொழும் பொருளொடுவாழ் நாளு, மன்னென வீங்கொன் றுண்டோ மருண்டநாந் தெளிய வென்றான்."—என்பதிதனு ளுயிரிறந் தாரைப் பேசினவாறு.—தேம்பாவணி.—"துள்ளிவா முழைகாள் கொம்பிற் றுன்னிவாழ் குயில்காள் மேய்ந்த, னள்ளிவா முளிகா டேன்கா ளழனிறக் கமலப் பைம்பூம், பள்ளிவாழோதி மங்காள் பறித்துவாழ் கொடிகாள் கோற, லுள்ளிவாழ் வரிகாள் சொன்மின் னுயிர்தரித் தலிற்றீ துண்டோ." என்பதிதனுள் விலங்கும் பறவையு மென் றிவற்றோடு பேசினவாறு.—தேம்பாவணி.—"என்னெஞ் சொப்ப விருபொழுதும் விருட்பொழிலே, புன்னெஞ் சொப்ப வுயிரெல்லா நிழற் றுயருட், டன்னெஞ் சொப்பத் தந்தோம் புந்தையைப் பெருமா, னின்னெஞ்சொப்ப நிறுத்திலையெக் காடென்றான்." என்பதிதனுட் டிருமகனகன்ற துயராற் சூசை நொந்தொரு சோலையைப் பேசினவாறு:—அங்ஙனந் தன்னெஞ்சாயினுந் தன் கண் முதலிய வுறுப்புக்களாயினு முன்னிலையாகப்பேசுவ திவ் வலங்கார மாகும். அங்கேதானே யகன்றமகற்குத் தாயும் வருந்திச் சொன்னதாவது:—"கயலரம் விழியே கடனமவனை, யயலாடலிலா கியகன் றன்னே, யியலாத விடிக்க ணியைக் கினிநா, னுயலாம் வழியொன் றுளதே னுரையீர்." என்பதிதனுட்டன் கண்ணோக்கிப் பேசினவாறு. பிறவுமன்ன. எ-று. (கூசு)

**362.** விடையில் வினாவே விடைவேண் டாமையு
மடைய லாரையு மஃறிணை யவற்றையு
மனவியப் பாதி வழங்கப் பலகுணம்
வினாவிற் போல விளம்பிய கலையே.

(இ-ள்.) விடையில் வினாவலங்காரமாமா றுணர்த்துதும். மறுமொழி வேண்டாமையு முன்னிலை யல்லாரையு மறிவில வற்றையும் வினாவிற் போல வுரைப்பது விடையில் வினாவணி யெனப்படும். இதுவே யதிசயமு மையமு மகிழ்ச்சியுஞ் சினமு முதலியவற்றைக் காட்டவு மொன்றனை மறுப்பவு நொந்து புலம்பவு முதவு மென் றுணர்க. (வ-று.) விருத்தம்.—"கண்பட் டுறங்கவென் னிறையோன் கண்டேனோ கண்டனைத் தேனோ, பண்பட் டினிய மழலைச்சொற் பகர வினிதிற் கேட்டேனோ, புண்பட் டுளையென் னெஞ்சுவப்பப் பூங்கண் ணென்மேன் மலர்ந்தனவோ, வெண்புட் டிறப்ப வுயிர்செலவோ வென்மே லிரங்குந்தயை யிதுவோ." என்பது மகிழ்ச்சி வினாவணி.—விருத்தம்.—"கெட்டோ நாமோ மின்னென வொல்கிக் கெடுநன்றி, யிட்டோ நாமோ விட்டதி னிஃதோ பயனந்தோ, பட்டோ நாமோ புன்னய நக்கிப் பரவீட்டை, விட்டோ நாமோ வேகு துணாமோ வெனவேவார்." என்பதிதனுண் ணுணுகி நொந்தார் புலம்பிய வினாவணி.

"களிப்பனோ வழுவனோ கனிய தானெனை, விளிப்பனோ சுளிப்பனோ விழைந்த வாண்முக, மொளிப்பனோ தழுவிய வுவப்பின் முத்தமு, மளிப்பனோ வுலகெலா மளித்த நாதனே." என்பதைய வினாவணி. பிறவுமன்ன. எ-று.()

**363.** வினவில் விடையே வினவினா லெனப்பிறர்
மனவுணர் வுரைத்து மறுவுரை கூறலே.

(இ-ள்.) வினவில் விடை யலங்காரமாமாறுணர்த்துதும். ஒன்றை யுரைக்குங்காற் பிறரெதிர் பிறிதொன்றை யுணர்ந்து வினாவினதாகச் சொல்லித் தன்பொருள் விளங்க மறுமொழி யுரைப்பது வினவில் விடையணி யெனப்படும். (வ-று.) தேம்பாவணி.—"காதலே பாசமாய்க் கால்கை வீக்குத, லாதலே பிரிவுணக் கரியதா மென்பாய், காதலே பாசமாய்க் காதன் மிக்குளத், தாதலே நாடொறு மிறுக்க லாவதேன்.—கொந்திய விரகநோய் கொழுந்து விட்டெரிந், தந்தில வழலவிப் பரியதா மென்பாய், கொந்தியதீ யுலை தூண்டிக் கொண்டுநீ, யந்தில நசைக்கற லிட்ட லாவதேன்.—'நெடிதுநா ளுற்றநோய் மருந்தி னீர்மையாற், கடிதுதீர் தரலருங் கருமமா மென்பாய், நெடிதுநா ளுற்றநோய் நீள மீண்டுயிர், கடிதுமாய்ந் தொழிதரக் கடுவுண் பாவதேன்." எ-ம். பிறவுமன்ன. எ-று. (ங-அ)

**364.** சித்திர வணியே தீட்டிய படவடி
வத்திறத் தனைத்தையு மையென வகுத்தலே.

(இ-ள்.) சித்திர வலங்காரமாமாறுணர்த்துதும். காதலுணர்ந்தவை கண்ணுற் கண்டாற் போலப் பிறர் தெளிந்துணர்வுற நுட்பவிபரத் தெடுத்தபொருளை விரித்துக் காட்டல் சித்திர வலங்கார மெனப்படும்.—நைடதம்.—"அவிர்பூ ஞெலியா மலடக் கினளாய்க், கவர்வா னரல்கண் டுமகன் றிலதாற், றுவர்வாய் மயிலொ ருட் டிடலாகு மென, நவைதீ ரனமெல்ல நடந் ததுவே." எ-ம்.—தேம்பாவணி.—"புலம்பு மோதையி னெழுந்தெனப் பொன்னிடச், சிலம்பு மேல்வலச் சீறடி யூன்றிலிற், கலம்புனைந்த பொற் காலயற் பொன்மலைத், தலம்புனைந்த மின் சாயலொத் தாளரோ.—துகிற் கலாபமு டொன்ற விளிம்பெடுத், துகிற்கொ டாலயர் ஒளி யுதிர்த்தடு, மகிற்கு லாம்புகை தூது விட் டங்குழன், முகிற்கு லாமினின் மின்முகங் கோட்டுவாள்." எ-ம். பிறவுமன்ன. இதற்கு மீண்டுஞ் சித்திர வணியைக் காண்க. அன்றியும், இதற்கு மிதன்மேற் கூறிய சுவையலங்காரத்திற்கும் வேற்றுமை யாதெனி லது மனத்தினிகழ்ந்த பற்றினை மாத்திரம் புறத்துத் தோன்றுங் குறிகளால் விரித்துக் காட்டலியல்பாம். அச்சித்திரமோவெனி லெவ்வகைப் பொருளுங் கண்முன் வைத்தாற்போல நுட்பமாகக் காட்டு மியல்புடைத்தாகு மென்றுணர்க.—தண்டியலங்காரம்.—"கோமூத் திரியே கூட சதுக்க, மாலை மாற்றே யெழுத்து வருத்தனை, நாக பந்தம் வினாவுத் தரமே, காதை காப்பே கரந்துறைச் செய்யுள், சக்கரஞ் சுழிகுளஞ் சருப்பதோ பத்திர, மக்கரச் சுத்தமு மவற்றின் பால." இது மேற்கோள். எ-று. ()

**365.** ஒழிபணி பலவற்றை யொழித்தன வுரைத்தலே.

(இ-ள்.) ஒழிபலங்கார மாமாறுணர்த்துதும். தன் பொருள் விளக்க ற்குரிய பற்பலவற்றை யுரைக்க மாட்டா தொழித்தாற் போல வவற்றைச் சுருங்கக்காட்ட லொழிபணி யெனப்படும். (வ-று.)—வெண்பா.—"ஞான வமுஞ் சீர்நலமு நொங்தொன்று ரேற்றியதன், வேனலமு மாற்று விளம் பனே-தேனலமுண், டன்ற வருண்முகிற்கை யெங்கோன் கொடையொ ன்றே, தோன்ற வுரைப்பேன் றொழுது." எனப் புகழொழிபணி.—வெண் பா.—"உள்பொருள் சொல்லா யுளைவார்கண் டொன்றியாய், கொள்பொ ருள் வெஃகிக் குடியலைப்பா - யெள்பொரு, ளின்று வினிதென்பா யிஃகி றிய மெய்க்கடவு, டொன்றுப் பகைப்பானென் சொல்." என விகழ்பொழி பணி. பிறவுமன்ன. எ-று. (சo)

**366.** அமைவணி யல்லவு மாமென் றதுபோற்
சமைந்து மற்றொன்றன் றகவெழ வியம்பலே.

(இ-ள்.) அமை வலங்கார மாமாறுணர்த்துதும். நன்மை யல்லனவு மெய்யல்லனவும் பிறர்க் குபகாரமாய் நல்லவாகவு முள்ளவாகவு மொப்பி த்தாற்போலமைந்து பிறிதொன்றனை மிக்குரைத் தொறுத்த லமைவணி யெனப்படும். (வ-று.)—வெண்பா.—"பொய்யுங் களவும் புறக்காமத் தீதி ழிவு, நையு முயிர்க்கே நலையன்றோ - செய்யுன், குலத்துரிமை யென்று யுள தெனினுஞ் செந்தீத், தலத்துரிமை தானே வுனக்கு." எ-ம். பிறவு மன்ன. எ-று. (சக)

**367.** சிலேடை யென்ப திரிசொல் பலவிணைந்
திருபய னாக வொருதொடர் புணர்த்தலே.

(இ-ள்.) சிலேடை யலங்காரமாமாறுணர்த்துதும். பல பொருள்குறி த்த வொரு சொல்லாகிய திரிசொற் கொண்டிருபயனைக் கொள்ளும்பா ட்டை முடிப்பது சிலேடை யெனப்படும். (வ-று.)—வெண்பா.—"பாடல மேறிப் பகைக்கிள்ளை யார்த்தோட்டிச், சேடலர்தன் பூத்த தினைகாத்தா-னுடக, மார்ந்த கவிகையால் யாதனையு மாங்கோட்டி, யோர்ந்துறைமே லுற்றா னெளி." என்பதிதனிற் பாடல மரத்திலேறிக் கிளிகளைக் கூப்பிட் டோட்டிப் பூத்த தினைப் புனங்காத்தா னெனவுங் துவரங்காட்டி னிறை ந்த குரங்குகள் யாவையுங் கையா லோட்டினு னெனவு மொரு பயனாகக் கொண்டு பின்னையுங் குதிரையேறி பகைவர் பரிப்படையைப் பொருதோ ட்டித் தன்னாட்டுச் சிறுமை காத்தா னெனவு மளித்த பொன்னிறைந்த கொடையாலாங் கில்லாம்படி துன்பங்களையு மோட்டினானெனவும் வேறொ ருபயனாகக் கொள்ளவும் பெறுமெனக் காண்க. அன்றியும்.—விருத்தம்— "கனிகிழல்பூத் தருந்தருநான் கடுத்தம் மூன்றுங் கழித்துக்காய் தளிர் மேய்ந்து சவலை யோடைக், கினிதவழ்தே னுண்மலர்பஞ் ரொடையே சூடி யிலையெவள் ளித்தலைக் குறட்கொம் பிடைத்தூண் வைத்த, தனி

நிலை நேரிசைச் சிந்தும் மதத்தாற் சாயனி யின்னிசை பாட வெள்ளை யானை, கனிவளர் மாபுக ழேந்தி வீரபா கடைத்த வுயர்தென் மலையக் கோட்டிற் கண்டேன்." என்பதிதனுட் சொன்ன பொருளெலா மொரு பயனுகக் கொண்டாலியானைக் குரியவாகவு மவை மற்றொரு பயனுகக் கொண்டா லுவமைச் சிறப்பின் வெண்பாவிற் குரியவாகவும் பயன்படு மெனக் கண்டுணர்க. இதுவே சிலேடை யுவமை யெனப்படும்.—"ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி, தெரிவுதர வருவது சிலேடை யாகும்." என்று ரன்றியும்,

அச்சிலேடை யலங்கார விரிவுவருமாறு.—தண்டி யலங்காரம்—"அதுவே, செம்மொழி பிரிமொழி யெனவிரு திறப்படும்." என்றார். செம்மொழிச் சிலேடையாவது:—ஒருவகையா னின்று பலபொருள் படுவது. (வ-று.) "செங்கரங்களா லிரவு நீக்குந் திறம்புரிந்து, பங்கைய மாதர் நலம்பயிலப்-பொங்குதையத், தோராழி வெய்யோ னுயர்ந்த நெறியொழுகு, நீராழி சூழ்ந்த நிலத்து." எனவரும். பிரிமொழிச் சிலேடை யாவது:—ஒருவகையானின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்தும் பலபொருள் கொள்ளப்படுவது. (வ-று.) "தள்ளா விடத்தோ தடந்தாமரை யடைய, வெள்ளாவரி மானிடர் மிகுப்ப-வுள்வாழ்தேன், சிந்துந் தகைமைத்தே யெங்கோன்றிருவுள்ள, நந்துந்தொழில் புரிந்தார் நாடு." என வரும். அன்றியும்,—தண்டியலங்காரம்.—"ஒருவினை பலவினை முரண்வினை நியம, மநியம விலக்கு விரோத மவிரோ தமென, வெழுவகை யானு மியலுமென்ப."என்றாராகலின், ஒருவினைச்சிலேடையாவது:—ஒருவினையான் வருவது. (வ-று.) "அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம், வம்புற்ற வோடை மலர்ந்திலங்க-வும்பர், நவம்புரியும் வானதியு நாண்மதியு நண்ணித், தவம்புரிவார்க் கின்பந் தரும்." என வரும். பலவினைச்சிலேடையாவது:—பலவினையான் வருவது. (வ-று.) "தவிர்வின் மதுவுண்களி தளிர்ப்ப நீண்டு, செவிமருவிச் சேர்நீர்மை தாங்கிக் - குயிலிசையு, மின்னுப்பிரார் நுண்ணிடையார் மென்றேளுக்கு மேவிலா, ரின்னுயிரை யீர்க்கின் றன."என வரும். முரண்வினைச் சிலேடை யாவது:—மாறுபட்ட வினையான் வருவது. (வ-று.) "மாலை மருவி மதிகிரிய மாமணஞ்செய், காலத்துணை மேவலார் கடிய-வேலைமேன், மிக்கார்கலி யடங்கா தார்க்கும்வியன் பொழில்கள், புக்கார்கலி யடங்கும் புள்." எனவரும். நியமச் சிலேடையாவது:—சிலேடித்த வற்றை நியமஞ் செய்வது. (வ-று.) "வெண்ணீர்மை தாங்கு வனமுத்தே வெறியவாய்க், கண்ணீர்மை சோர்வ கடிபொழிலே - பண்ணீர்மை, மென்கொ லியாழே யிரங்குவன வேல்வேந்தே, நின்கொ லுலாவு நிலத்து."என வரும். நியமவிலக்குச் சிலேடையாவது:—சிலேடித்த பொருளை நியமஞ்செய்த நியமத்தை விலக்குவது. (வ-று.) "சிறைபடுவ புட்குலமுந் தீம்புனலு மன்ன, விறைவனீ காத்தளிக்கு மெல்லை-முறையிற், கொடியன மாளிகையுங் குன்றமுமே யன்றிக், கடிகமழ்பூங் காவு முள."எனவரும். விரோதச் சிலேடையாவது:—சிலேடித்த வற்றைப்

பின்னரும் விரோதிப்பச் சிலேடிப்பது. (வ-று.)"விச்சாதர னெனினு மந்தர த்தின் மேவானு, லச்சுதன் வண்ணத்தின் மாயனு-னிச்ச, நிறைவான் கலை யான களங்கரீதி, யிறையா னனகனெங் கோன்." என வரும். அவிரோதச் சிலேடையாவது:—முன்னர்ச் சிலேடித்த பொருளைப் பின்னரும் விரோ தியாமற் சிலேடிப்பது. "சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கு, மாதிடத் தான் மன்மதனை மாற்றழிக்கு-மீதா, மனக மதிதோற்றிக் குமுதளிக்குந், தனத னிருநிதிக்கொன் றன்." எனவரும். பிறவுமன்ன. எ-று. (சஉ)

**368.** சங்கிரண மென்ப தரும்பல வணிவகை
கொங்கிரத் தொடையெனக் கூட்டிக் கூறலே.

(இ-ள்.) சங்கிரண வலங்கார மாமாறுணர்த்துதும். மேற்கூறிய வல ங்காரங்களிற் பல்வுந் தம்முட்கலந்து கூடிவரத் தாமுரைப்பது சங்கிரன வணி யெனப்படும். (வ-று.) திருக்காவலூர்க் கலம்பகம்.—வெண்பா.— "காந்தடைகை கஞ்சத்தாள் காவிக்கண் ணும்பல்வாய், வேய்ந்தலர்ந்த காவ லூர் மென்கொடையே - யீந்தமது, வுண்ணளிகாள் சொன்மினீ ரொத்து ளதோ பூவுலகிற், பண்ணளிப்பூத் தீந்தேன் பணித்து." என்பதிதனு ளுரு வகமு மொட்டும் விடையில் வினவும் பிறிதுரையுமெண விவ்வலங்காரங் கள் கலந்து கூடி வந்தவாறு காண்க. அன்றியும்,"தண்டுறை நீர்நின்ற தவத் தா லளிமருவும், புண்டரிக நின்வதனம் போன்றதா-லுண்டோ, பயின்று ருளம்பருமே பான்மொழியாய் பார்மேன்,முயன்றுன் முடியாப் பொருள்" எனவரும்—தண்டி யலங்காரம்.—"மொழியப் பட்ட வணிபல தம்முட், டழுவ வுரைப்பது சங்கீ ரணமே." இது மேற்கோள் எ-று. (சரு)

**369.** சொல்லணி யாறைந்தும் பொருளணி யையாறும்
புல்லணி யிருவகை புணர்ந்த தொகையென
முத்தமிழ்க் கிவையெலா முகமறை சிகைபொறை
யத்தகைத் தாகா வணிகல னுகக்கொண்
டெந்நூற்கு முதலாம் யுத்தி யஃதில்லா
லந்நூல் பித்த னகங்கை வாளென்ப.

(இ-ள்.) இவ்வதிகாரத்துள் விளக்கிய சொல்லணி முப்பதும் பொரு ளணி முப்பது மியலிசை நாடக மென்னு முத்தமி ழழகுறப் புனைதற்குரி யன. ஆயினு மொளிதரு மின்மணி குயிற்றிய வணிகலன் றமு மிருளுற விருகண் மூடிவரின் மாசென வகற்றற்போல விவ்வணி வகையானுந் தா னுரைக்கும் பொருட்கிரு ளுறுமைபேணி யின்னதற் கின்ன துரிய தெனவு மின்னதற்குரிய விடமின்ன தெனவு முணர்ந்து கூருதல் சான்றோர் கட னெனக் கொள்க. அன்றியுந் திருமணி யணிகல னுயினு மொழுங்கு மின்றி மட்டு மின்றித் திரளாய்த் திரட்டிக் குவித்தது தலைச்சுமையாக வெடுத் தல் சிங்கார மன்றதுபோல விவ்வகைய வணிகளும் பொருட்குப் பாரமாக் குவிந் தேற்றும லணிகலனு யலங்காரந்தோன்ற வளவு மிகாமலுமொழுங்

கு கெடாமது மவற்றை வகுத்துப் பூணல் வேண்டும். இவற்றிற் கெல்லாம் யுத்தியே முதற் காரணமாக வேண்டிற் றென்றஃ தில்லாதாயிற் கற்றனவெல லாந் தன்னைக் கொல்வதற் கேதுவாக நிற்கும் பித்தன்கைப் பிடித்தவாளே யொக்குமென்மனார் புலமையின் மிக்கோரெனக் கண்டுணர்க. எ-று.(சச)

**370.** எந்நூ னிலையினு மிவையெலா முணர்த்துது
மந்நூ லரியதென வஃகினு மொருநூல்
காட்டிய பலநடைக் கடைப்பிடித் தவற்றொடு
கூட்டிய மற்றவை கொள்ப நல்லோரென
வெழுத்துச் சொற்பொருள் யாப்பணி யென்றிவண்
வழுத்திய வைம்பொருள் வழக்கஞ் சுருக்கித்
தொன்னூ னடையொடு சிறந்த புறநிலைப்
பன்னூ னடையிற் பழையன கழிதலும்
புதியன புகுதலும் புலமையின் மிக்கோர்
விதியென விம்முறை விரும்பி வழுவில
மூந்நூல் விளக்கிய முத்தமிழ்த்
தொன்னூல் விளக்கத் துலங்கிய வாறே.

(இ-ள்.) எவ்வகைநூலினு மவ்வவற்றுரியன வெல்லாவற்றையு முழு துணர்த் திறுவது முற்றுணர்ந் தோர்க்கு மேலாவருமையாகையி லிங்கனு ணர்த்தவைப் பற்றுக்கோடாகக் கொண்டுரையா தனவு முணர்வ தறிவோர் தொழிலெனக் கொள்க. அன்றியுந் தொன்னூலை விளக்கிய புதுநூலாக வீண்டுச் சொல்லப்பட்ட வைந்திலக் கணவழியே தொன்மையிற் செந்த மிழ் நூலில் வழங்கிய சிற்சில வொழிப்பினு மின்று மந்நூலிற் புதியன சிற்சில விதிப்பினு மவையெலாங் காலவேற்றுமையானும் புறநிலை நூலின் வழி வந்தமையானும் வழுவென் றிகழப்படாவென நன்னூற் கலைவல் லோன் முதற் றொன்னூற் புலவருள்ளும் பலரொன்றுணர்க. எ-று. (சரு)

இரண்டாமோத்துப் பொருளணியியல்.—முற்றிற்று.

———:o:———

அதிகார மொன்றிற்கு ஓத்திரண்டிற்கு ஆ சூத்திரம். 70.
மேற்கோள் சூத்திரம். 56. ஆ சூ. 126.

அதிகார மைந்திற்கு மேற்கோளோடு கூடிய ஆ சூத்திரம். 829.

———:o:———

ஐந்தாவது:—அணியதிகாரம்.—முற்றிற்று.



மாணாக்கன் றொகுத்துரைத்த வாறுகாண்க.

மெய்ப்பொரு ளொருபொருண் மேவி யேத்தவுஞ்
செப்பரு மறைப்பொரு டிசையெலாம் வழங்கவும்
வேதப் பயன்றரும் வெளிறில வாயா
லோதித் தொன்னூ லுடைப்பயன் பொதுப்படச்
செந்தமி ழுணர்ந்து தெளிந்த முன்னோர்
தந்த நடையொடு சிலபுற நடையினைத்
தெண்ணைந் தெழுத்துஞ் சொன்னூற் றிரண்டு
மெண்ணே ழிரண்டு பொருள்யாப் பொருநூறு
மெண்ணெட் டாறணி யெனச்சூத் திரத்தொகை
யெண்ணூற் பத்தைந்து மீரைந்து மாக
வருந்தமி ழிலக்கண மைந்தையும்
விரித்து விளக்கினன் வீரமா முனியே.

வெண்பா.

ஆதி நூலோதிய வோராதிப் பொருடோரா
னோதி நூலாய்ந்து முணர்வானோ—கோதினூற்
கற்றாலுங் கற்றபய னுண்டோ வக்கடவு
ளொற்றாலு மேத்தாக் கடை.

—:0:—

இந்நூற்குக் கலைவல்லவர் தெருட்குரு வென்னுஞ் சிறந்தநாமஞ் சூட்டினர். அஃதென்னையோவெனின் :—

கட்டளைக்கலித்துறை.

அருட்கலைஞோர் முத்தமிழ் நூலுரைத்த வறமுதனாற்
பொருட்களை யாய்ந்துழி வல்லோர்தெரித்த புதைபொருளின்
மருட்களை நூக்கிப் பொருட்பயன் சூட்டி வழுத்துதலாற்
றெருட்குரு நாமந் தொன்னூல் விளக்கிற்குச் சிறந்ததுவே.

முன்னூற்றுளக்கிய வைந்திலக்கணத் தொன்னூல் விளக்கம்

